உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞானஸம்பந்தகுருவர்யாயநம:

# ஞானபேதவிளக்க நியாயரக்ஷாமணி.

இஃது

சென்னை, வேதாகமோக்த
சைவசித்தாந்த சபையடியவருள் ஒருவரும்,
சென்னை, ப்ரீசர்ச்மிஷன்ஸ்கூல் தமிழ்ப்பண்டிதரும்
ஆகிய

ஸ்ரீ சுப்பராயநாயகரவர்களால்

சென்னை;
ஆதிகலாநிதி அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

1887ஆம்

இதன்விலை (2) அணா.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞானஸம்பந்தகுருவர்யாயநமஃ.

# ஞானபேதவிளக்க நியாயரக்ஷாமணி.

காப்பு.

ஞானநான்காகு நலமுணர்ந்தவைட்யா
ரீனமாற்றுதும்யா மிபமுகற்றெழுதே.

## நூல்.

ஸ்ரீசேக்கிழார்சுவாமிகள் அருளிச்செய்த பெரியபுராணத்தின்கண், ஸ்ரீஜ்ஞானஸம்பந்தப்பெருமானது புராணத்தில் "சிவனடியே" என்றற்றொடக்கத்துப்பாடலில், கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டைஎன்னு நான்குஞானங்கள் பெறப்பட்டனவென எமது ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரநாயகரவர்கள் ஆசாரியபிரபாவம் என்னுநூலில் எழுதிவெளிப்படுத்தினர். அதனைக்கண்ட யாழ்ப்பாணம் செந்திநாதையரென்பவர் "ஞானம் நான்கு என யாம் யாண்டுங்கண்டதுமில்லை கேட்டதுமில்லை" எனத்தருக்கி நாயகரவர்களுக்கோர்கடிதமெழுதி யிறுமாந்திருந்தனர். அதனை நாயகரவர்களோர்பொருளாக மதிக்கவில்லை. பின்பு ஓர் புரளியவதானி தான்அச்சிட்டு வெளிப்படுத்திய சீகாழிப்புராணத்தில் ஞானம்நான்கு என்றுகூறுபவர் நகைக்கப்படுவர்எனத் தான் பலராற்காறியுமிழப்படுவதறியாது வெறிகொண்டுகுரைத்தனர். இவர்கள் ஒருவர்பின்னொருவராக மலைந்து குழறுமாபாஸங்களை நோக்கி இனித்தாமசிப்பதுசரியல்லவென்று அம்முழுமக்கள் ஸந்தோஷிக்குமாறு நாயகரவர்கள் "ஞானபேதவிளக்கம்",

என்னு நூலொன்றியற்றி வெளிப்படுத்தினர். அதற்குமறுப்பாக "ஞானபேதவிளக்கச்சூறுவளி" எனவோர்நூல் செந்திநாதையர் குளறிவழிந்தனர். எமது நாயகரவர்களது அநுமதிபெற்று அதனைமறுத்து "ஞானபேதத்தெளிவு" என்னு நூலொன்று யாம்செய்துவெளியிட்டனம். பின்னர், கோப்பாய் - சபாபதிப்பிள்ளையென்னும் யாழ்ப்பாணியொருவர் "ஞானசூடாமணி" என வொருசுவடியெழுதி நாயகரவர்களுடைய விளக்கத்துக்குமறுப்பு எனப்பேரிட்டு வெளியிட்டனர். அதனையுஞ்சிதைத்து "ஞானபேதத்துணிவு" எனவோர்நூலியற்றி யாம் வெளிப்படுத்தினோம். இதற்குமேல், யாழ்ப்பாணத்துஐயரும், பிள்ளையும் தாங்கள் வழிதப்பிபகப்பட்டுக்கொண்டதை நினைந்தேங்கியினியென்செய்வது என்று தங்கள்விதியை நொந்துகொண்டு வாளாகிடக்கவும், முன்னொருகா லெங்கையிற்சிக்குண்டு தலைகவிழ்ந்திழிந்தழிவெய்திய ம-தணிகாசலமுதலியாரென்பவரிப்போது ஓர்வீராவேசமேலிட்டு மருள்பிடித்தமங்கையரொத்து வெளிப்பட்டுத்தலைசுற்றியாடினர். இவர் மூலையிலும்,முடக்கிலும்,ஸந்திலும்,பொந்திலுமேயன்றிக் கோயிலிலும், குளத்திலும், மடத்திலும்,தடத்திலும்,மாளிகையிலும்,மண்டபத்திலும், மற்றும்பெரிய சபைகளிலும் என்றும் வாய்திறந்தறியாதவர். இவர் தமது பிரஸங்கத்தில் முன்னிருந்து தலையாட்டும் பேதைமுதலியாரது ஆதரவுகிடைத்த ஸம்பிரமத்தால் (பொன்னனுக்குப் பூவிராகனகப்பட்டது) போல் ஸந்தோஷித்து வெளிவந்தனர். இவருக்கு எம்மேற்பொங்கிவழிந்துள்ள பொறாமைச்சூடிவனைத்தூண்ட விவரதுமலபோதந்ததும்பி யோர்பிரபந்தமாகத்திரண்டு வெளிப்பட்டது. இதற்குயாரையாவ தாக்கியோராக்கி வெளியாக்கிவிட்டுத் தப்பலாமென்றிவர்வேண்டிவேண்டி யொப்பாதுமறுத்தவர்பலர். இப்போது ஒப்பியதலையாட்டியாருக்கு இவர் ஆடுவெட்டிப்பொங்கலிட்டுப் பச்சைபோட்டு வேண்டிக்கொண்டதை யாருமறிவார்கள். எப்படியோ வெளிக்குவந்துவிட்டார். இனியிவர்தப்புவது கஷ்டம்பாவம். இவர்தான் முடக்குஸந்துப்பிரஸங்கியென்றும், கீகீப்பிரஸங்கியென்றும் பிரஸித்தியடைந்திருக்குஞ் சென்னைமஹாவித்வான். இவர்

பிறருக்கொன்றுந்தெரியாதென்று தூஷிப்பதே பெருந்தவமாகக்கொண்டவர். அப்படியே இப்போது எமதுநாயகராவர்களைக் கல்வியில்லாதவரெனத் தமது வழுவாசகத்திரட்டிற் காட்டப்புகுந்தார். இவர்கண்டவழுக்கள் "ஞானபேதவிளக்கம்" என்னுநூலிலாகையால், "ஞானபேதவிளக்கமறுப்பு" என்னும்பேரைத் தமது மலபந்தத்திரட்டுக்கிட்டுமகிழ்ந்தார். முன்வெளிவந்து சாதித்தவர்கள்கதியைப் பார்த்துக்கொண்டிருந்தும் இவர்பாவம் யோசனையின்றித் தாமுந்தமது சரக்கைக்கொட்டி யளந்தார். அந்தச்சரக்குப் புழுத்தசரக்காயிருத்தலைப் பிறரறியத்தண்டோராபோடுவித்து, அதனையாரும்வாங்கி நுகர்ந்து வாந்திபேதிக்குள்ளாகாமல் க்ஷேமமடையும்பொருட்டு இனிதுபகரிப்பாம்.

இதுகாறும் உபயவாதிகளுமெடுத்து விவகரித்துவந்த பிரமேயம் ஸ்ரீஜ்ஞாநஸம்பந்தரடைந்தஞானம் இரண்டு, நான்கு என்பதைப்பற்றியது. இதற்குமேல் ஞானஸம்பந்தர் பசுவென்பதும், பதியென்பதுமாகிய விவகாரமெழுந்தது. இவற்றுள், ஞானம் இரண்டென்பதும், ஞானஸம்பந்தர் பசுஎன்பதுமாகிய ஸித்தாந்தத்தையே பூர்வபட்சிகள் கையாண்டு வருகின்றார்கள். யாமோ ஞானம்நான்கு என்பதும், ஞானஸம்பந்தர் பதிஎன்பதுமாகிய ஸித்தாந்தத்தையே கையாண்டுவருகின்றோம். எம்மை யாவர் மறுப்பினு மிவ்விரண்டுபிரமேயங்களே விரோதிக்கத்தக்கவை. இங்ஙனமாக, நமது த-முதலியார் மற்றொன்றுவிரித்தலென்னுங்குற்றம்படத் தம்மைப்பேரிலக்கணியாகமதித்திறுமாந்து எங்களுக்கிலக்கணந்தெரியாதென்று குறைகூறினர். யாம் இலக்கணமும், தர்க்கமுங்கற்றிணையற்றிருக்கின்றோமென வெளிவரினன்றோ வெமதுமாட்டாமையைக் காட்டி அவர் தமதுண்மையை நாட்டவேண்டும்? அன்றியும், எம்மைக்கல்வியுடையாரென வவர்மதித்துக்கூறுவதா லெமக்குப் பெருமையுண்டாயினன்றோ வவரிழித்துக் கூறுவதா லெமக்குச்சிறுமையுண்டாகும்? அவர்கூறுஞ் சிறுமைபெருமைகள் "நாயேறிவீழ்ந்தென்னட்டாத்துகிலென்" என்பதற் கினஞ்செய்திழிந்தன. எடுத்துக்கொண்டகட்சியை நிர்வகிக்கமுடியாத விழுதைராயரென்செய்வார்பாவம்!

இனியிவரது கல்விவளத்தையும், மதிநுட்பத்தையும் முன்னர்க்காட்டி, இவரெம்பாலேற்றித் தூற்றியதூஷணங்களே யெமதுகாற்கடைகொண்டுமாட்டியோட்டி எடுத்துக்கொண்டபிரமேயமாகிய ஞானசதுஷ்டயம், ஞானஸம்பந்த பரத்வநிரூபணம் என்னுமெமதுஸித்தாந்தங்களைநாட்டி யுண்மையைத்தீட்டி யுபகரிப்பாம்.

இவர் தமதுநூலுக்குப் பேரிட்டவழகே யிவரதுபுலமையைத் தெற்றெனப்புலப்படுத்திவிட்டது. என்னெனின், "விளக்கமறுப்பு" என்றார். விளக்கம் மறுக்கப்படுதல் யாங்ஙனம்? அது அந்தகாரப்படுகுழியை நிலைக்களமாகப் பெற்றவர்க்கேயமையும். (விளக்கச்சூறாவளி)எனச் சென்றநாதையர்தேடியது மிந்தக்கதியேபெற்றழியும். "இலக்கணவிளக்கச்சூறாவளி" எனவான்றோர்கூறினரெனின், "இலக்கணவிளக்கம்" செய்தவருமான்றோரோயாகையால் அதனுண்மையை யுய்த்துணர்வாராக. இதனால், விள்க்கத்துக்குமேல் சந்திரோதயம், சூரியோதயமித்யாதி நாமங்களே யமையும். இவ்வளவுகண்டெழுதத்தெரியாத நமது த-முதலியாரிறுமாந்து பிறர்குற்றங்கண்டது தலைசாய்ந்தது.

நமது சு - முதலியாரைத்தேடிய த - முதலியார் ஓர் காப்பு வரைந்தனர். இந்தக்காப்பு இரவற்காப்பேயன்றிச் சொந்தக்காப்பன்று.அவ்விரவற் பொற்காப்பிற் சிறிதுபொன்னைத்துண்டிட்டுநீக்கி அதற்குப்பதிலாகத்தம்மிடத்துள்ள பித்தளையைச் சேர்த்தொன்றுபடுத்தி, அது இருஜாதிலோகங்களாலாகியது என்னும்படித் தமது மோசத்தையும், அவிவேகத்யையும், படிப்பின்மையாற் பாடத்தெரியாமையையும் புலப்படுத்தி யிடர்ப்பட்டுழந்தார். அது என்னெனின், "பிரணவப்பொருளாம் பெருந்தகையைங்கரன், சரணவற்புதமலர் தலைக்கணிவோமே" என்னும் வெற்றிவேற்கையிலுள்ள காப்பையேகவர்ந்து "பிரணவவடிவன்பெருந்தகையைங்கரன், சரணமலரிணை சரணமாமெமக்கே"எனச்சிதைத்துச் சீரழிந்ததேயாம். இவரது ஆபாஸமென்கொலோ? திருடிப்பிழைப்பது மோர்பிழைப்பா? அதனைச்சிதைத்துஆண்டால் உடைமைக்காரருக்கு உடைமைதெரியாமற்போகுமா? உடைமைக்காரரிப்போதில்லாமையால் கேட்பாரின்றெனின், அவர்சந்த

தியாரும், அவர்சொத்தையநுபவிக்கும் பாத்யமுடையாரு
நிறைந்திருக்கு மிவ்வுலகில் நமது த-முதலியாரது மணி
யம் செல்லாதெனவறிக. சிலசொற்களை யொன்றாகச்சேர்
த்து ஓர்காப்புச்செய்யுள் பாடவறியாது படிற்றொழுக்கம்
பூண்ட விவருக்கும் ஒருவாயா! இனியேனுமிடர்ப்படாது
சுகிப்பாராக.

இதுநிற்க, (நூல்) என்றுதொடங்கிய வவரது ஆ
பாஸத்திரட்டில் "உலகத்துள்ளோரடையவிருப்பது பொருள்,
அது கல்விப்பொருள், செல்வப்பொருள் என்றிருவகைப்படும்."
என வோரஸ்திபாரம்போட்டார். இது ஆழமும், உறுதி
யுமில்லாததென்பதைக் குத்திக்கிளறிக்காட்டுவாம். பொ
ருள் என்னும்பிரயோகம் அடையின்றி யாண்டுவரினும்
அது பொன்னொன்றினையே குறிக்கும். பொதுவாகக்கல்வி,
செல்வமென்பவைகளைக்குறிக்காது. "பொருடனைப்போற்றி
வாழ்" எனவும், "பொருளில்லார்க்கிவ்வுலகமில்லை" எனவும்,
"அறம்பொருளின்பம்வீடு" எனவும், "பொருளாட்சிபோற்றாதார்க்
கில்லை" எனவும்போந்த பிரமாணங்களாலறிந்தடங்குக. ம
யக்கவுணர்வுபட நமது த-முதலியார் மதிமயங்கிப்பிணைத்
த மகுடவாசகம் மாசுபட்டழிந்தமையால், அவரதுவினையி
ன்பயன் அம்மம்மகொடிதாயிற்று. இனி அது இருவகைத்
தென்று அவர் பிணங்கிக்கூறியது "திருவுமெய்ப்பொருளுஞ்
செல்வமுமெனக்குன் சீருடைக்கழல்கள்" என்னுந்தமிழ்வேத
த்தாற் றலையிடறிவீழ்ந்தது. சம்பந்தரதுவாக்காற் புத்தன்
றலையிடறியதுபோல வன்றொண்டரதுவாக்கான் முதலியா
ரது ஸித்தாந்தத்தின் முடியிடறியதென்க. (திருவும்=தகிலு
டுத்துப் பொன்பூண்டுதிரியும் ஸம்பத்தும், மெய்ப்பொருளும்=அழி
யாத மெய்ஞ்ஞானநிதியும், செல்வமும்=செல்வத்துட்செல்வஞ்
செவிச்செல்வமச்செல்வஞ்-செல்வத்துளெல்லாந்தலை, எனச்சிறந்த
வித்யாஸம்பத்தும்-உன்சீருடைக்கழல்களே) என்று பொருள்வி
ளங்கத்தோன்றுதற்குமாறாக இரண்டேபொருள்களென்று
தலைதடுமாறவுரைத்தது தட்டழிந்துபோயிற்று. இந்த வு
ண்மையையறியாத நமதுஈழநாவலரு மித்தமிழ்மறையை
யறியாதிடர்ப்பட்டார். (திருவும்=பொன்முதலிய பொருளும்,
மெய்ப்பொருளும்=நென்முதலிய பொருளும், செல்வமும்=இவ்
விரண்டானுய வின்பமும்ஆம்) என வவர்பொருள்விரித்த புது

மையைத் திருமூல்லைவாயிலின்கண் யாவருமறிவார்கள். எது எப்படியாயினுமாகுக. மெய்ப்பொருள்=னென்முதலிய பொருள்கள் என வவர்கூறியது எந்தவாதரவுகொண்டோ வறியேம். னென்முதலிய பொருள்கள் மெய்ப்பொருளாவது ஈழநாட்டாரது ஸித்தாந்தம்போலும். நான்குஞானம்இரண்டுஞானமும், ஞானஸம்பந்தரோர்பசுவுமாகிறபோது னென்முதலியபொருள்கள் மெய்ப்பொருளாகும்! ஆகும்!!

நமது த-முதலியார் கல்வியானது அறமும், பொருளும், இன்பமும், வீடும்பயக்கும் பெருமைசான்றது எனவோருண்மைகூறினர். இதனல், அறம்பொருளின்பம்வீடென்னும் புருஷார்த்தத்தைப் பயத்தற்குக் கல்வி ஏதுவென்றுயிற்று. கல்வி புருடார்த்தத்துக்கு ஏதுவாகுங் கருவியாயிற்றேயன்றி யக்கல்வியே புருடார்த்தமாதல் சிறந்திலது. ஆகவே, "உலகத்துள்ளோர் அடையவிருப்பது பொருள்" என்று நம்மவர் கூறியது துணிக்கப்பட்டு, "உலகத்துள்ளோர் அடையவிருப்பது அறம்பொருளின்பம் வீடென்னும் புருஷார்த்தம்" என்றுகூறுவதே சிறந்ததெனக்கணிக்கப்பட்டது. இன்னுங் கல்வியை விசாரிக்கும்போது அது புருடார்த்தத்தைப்பயப்பதொன்று எனக்கூறுவதும் உபசாரமேயாம். எங்ஙனமெனின், அறம்பொருளின்பம் வீடென்பன பூர்வபுண்ணியப்பயனுய் விளையும்பேறுகளாம். கல்வியுமப்படியே பூர்வபுண்ணியப்பயனுய் விளையுமோர் பேறேயாம். இவ்வளவேயன்றிக் கல்வியினுலறமுதலியன வுண்டாகா. கல்வியினுலொருவனுக்கு அறம்விளைவதாயின், கல்வியின் சுருக்கமும், பெருக்கமுமே அறத்தின் சுருக்கமும் பெருக்கமுமாகும். கல்வியுடையாரும் அறத்தைப்பாலிக்கின்றனர். கல்வியில்லாதாரும் அறத்தைப்பாலிக்கின்றனர். கல்வியுடையாரும் அறத்தைக்கடிகின்றனர். கல்வியில்லாதாரும் அறத்தைக்கடிகின்றனர். கல்வியின் பயனுகவறம்கிலேக்குமாயின், அந்தக்கல்வியுடையார்க்கேயது சிறக்கத்தகும். அன்றியு மவரறத்தைக்கொல்லுதல் தகாது. அப்படியே கல்வியில்லாதார்க்கு அறம்புரிதல் தகாது. அவரறத்தைக்கொல்லுதலே தக்கது. கூர்ந்து யோசிக்

கிறபோது இப்போதுலகினடைபெற்றுவருமறங்களெல்லாங் கல்வியுடையவர்பால் அற்பமும், கல்வியில்லாதவர்பால் அதிகமுங்காணப்படுதல் பிரத்யக்ஷம். இதற்கு நமது த - முதலியாரும், அவரது குஞ்சாகிய சு - முதலியாருமேசான்று. நமதுமுதலியாரது கல்வியின்பயனாகியவறம் அரைக்காசும் யாருக்குங்கொடுக்காத திடத்தைப்பயப்பது என யாவரும் பிரமாணம்பண்ணுவார்கள். "தென்புலத்தார் தெய்வம்விருந்தொக்கலுனென்றாங், கைம்புலத்தாறோம்பறலை" என்னுந்திருக்குறள் அவருக்கு வேம்பாயிருத்தலும் யாவருமறிவார்கள். இவற்றை நமதுநண்பர் கவனிப்பாராக. செல்வமொருவனுக்கிருப்பதுகொண்டே யச்செல்வ மறத்தை யவனுக்கு விளைவியாது. அப்படியே கல்வியொருவனுக்கிருப்பதுகொண்டே யக்கல்வி யறத்தையவனுக்கு விளைவியாது. செல்வத்தைத் துர்விநியோகஞ்செய்திடல்போல், கல்வியையுந் துர்விநியோகஞ்செய்தலுலகிலநுபவம். செல்வத்தை ஸத்விநியோகஞ் செய்திடல்போல், கல்வியை ஸத்விநியோகஞ்செய்திடலுமுண்டு. இதனால், கல்வியானது ஸத்விநியோகத்திலேயே யுபயோகமாகுமென்ற ஸித்தாந்தம் நசித்தது. கல்வியினாலொருவனுக்கு அறிவு, ஒழுக்க மிவைகளுண்டாகமாட்டா. கல்வி யொருமுதலும், அறிவு ஒருமுதலும், ஒழுக்கம் ஒருமுதலுமாகும். இந்தமூன்றுந் தனித்தனிப் பூர்வபுண்ணியவிசேடத்தாலெய்தற்பாலனவாகிய ஸம்பத்துக்களாம். அநுபவத்திற்பார்த்தாற் சிலருக்குக் கல்வியிருக்கும், அறிவொழுக்கங்கள் பூஜ்யமாயிருக்கும். சிலருக்கு அறிவு விசாலமாயிருக்கும், கல்வியொழுக்கங்களிரா. சிலருக்கு ஒழுக்கமாத்திரமிருக்கும், ஏனையிரண்டுமில்லாமலிருக்கும். சிலருக்கு மூன்றுமிருக்கும். சிலருக்கு ஒன்றுமிராது. இவைகளை யுய்த்துணருங்கால் ஒன்றினாலொன்றுண்டாகுமெனவாவது, ஒன்றையொன்றுண்டுபண்ணுமெனவாவது யோசிக்கவிடமில்லை. ஓரறையில் விளக்கேற்றிவைத்தபோது அவ்வறையிலுள்ள பண்டங்கள் நேத்திரத்துக்குக் காட்சியாகின்றன. விளக்கினாலந்தப்பண்டங்க ளுண்டாயினவெனவாவது, விளக்கு அ

வைகளை யுண்டுபண்ணிற்றெனவாவது கூறாமல், அந்த விளக்குத் தனக்குமுன்னிருந்த வேறுபொருள்களை விளக்கியது என்னு முபமானமும் யாமெடுத்துக்கொண்ட பிரமேயத்தைச் சாதியாநிற்கும். கல்வியானது நன்மையைப்போற் றீமையைவிர்த்திபண்ணுதற்கு மேதுவாயிருத்தலால், அதற்கு அறிவை விளையப்பண்ணுமாற்றலேயுண்டென்றுகூறியது தவறாயிற்று. தீபம் தனக்குமுன்வைக்கப்பட்ட கெட்டபதார்த்தத்தையுங்காட்டி மருட்டல்போலக் கல்வியுந் தீயவறிவையும் ஒழுக்கத்தையுங்காட்டிமருட்டும். இதுபற்றியேயன்றோ "செல்வமென்னுமல்லலிற்பிழைத்தும்" என்றதுபோல் "கல்வியென்னும் பல்கடல்பிழைத்தும்" என்று பரமாசாரியரும் அருள்புரிந்தனர்? இவ்வுண்மைதேராது அகங்காரக்கல்வியைக் காலுமனையுமாகப்படித்து இறுமாந்து தம்மைக்கற்றவரென்றும், மற்றவரைக் கல்லாதவரென்றும் நாட்டவந்த த-முதலியாரது சித்தாந்தம் சபேடிகை செய்ப்பட்டது. இனிச் செல்வம், கல்வி, அறிவு ஒழுக்கம் என்பவைகளில் ஒழுக்கமே சிறந்ததாகி, ஒழுக்கத்தோடு செல்வம், கல்வி, அறிவுகளிருந்தால் விசேடமாமென்பது சித்தாந்தப்பட்டது. ஒழுக்கமுடையவர்மாட்டே கல்வி முதலியன மணம்பெறுகின்றமையால், அவ்வொழுக்கமுடையார்மாத்திரமே கல்வியின்பெருமையையும், பயனையுமெடுத்துப்பேச யோக்யராவர். ஒழுக்கமென்பதொருசற்றுமின்றிப் பொறாமை, லோபமுதலியநிதிகளுக்குப் பெருங்களஞ்சியமாய்த்துலங்கும் நமது த - முதலியாருக்குக் கல்வியின்சிறப்பும் புலமையுமென்செய்ய? அவர் தானுமொருகல்விமானாகத் தன்னைமதித்து, அது தன்னுடைய சொந்தஸொத்துப்போற்பெருமைபேசிப் பிறரையேசியது எம்மாற்றலைதிருகி வீசியதாயிற்று. இன்னும் விரிக்கிற்பெருகும்.

இதுநிற்க, வேறொருவிசேடம்பகர்ந்தனர். அது "இக்கல்விக்குக் கண்களிரண்டு. அவை தருக்கநூல் இலக்கணநூல்களாம்" என்பதேயாம். "எண்ணென்பவேனையெழுத்தென்பவிவ்விரண்டுங், கண்ணென்பவாழுமுயிர்க்கு" என்னுந் திருக்குறளைக்கூர்ந்துணர்ந்திலர்போலும். இதில் உயிர்களுக்குக் கண்களிரண்டெனப் பெறப்பட்டதன்றிக் கல்விக்குக் கண்க

ளிரண்டெனப் பெறப்பட்டதில்லை. தருக்கமும், இலக்கணமுமே கல்வியாகையால்; அக்கல்வியை யவற்றில் வேறுபடுத்தியுரைத்தது சுத்தமடமையாம். தேகத்துக்குக் கண்களிரண்டு, தேகத்துக்குக் கைகளிரண்டு, தேகத்துக்குக் கால்களிரண்டு, தேகத்துக்குத் தலையொன்று எனக்கூறி எல்லாவவயங்களையும் பிரஸ்தாபித்துவிட்டு இவைகளையெல்லாமுடையதேகம் வேறுயாதாகத்தீர்மானித்து முடிவுகூறுவாரோ தெரிகிலம். எல்லாஞ்சேர்ந்து தேகமாகிறபடித் தர்க்கமுதலிய யாவுஞ்சேர்ந்தே கல்வியாதலையறியாது கண்மயக்கேறிக்கழறிய நமது த-முதலியாரது போதம் அவருக்கு எந்தக்கயவன் படிப்பித்ததோ வறியேம்.

இனி நமது சு-முதலியாரைஅடிமைகொண்ட த-முதலியார் எமது நாயகரவர்களைப்பிரஸ்தாபித்து "தன்போலிக்கல்வி முழுதையும் புலப்படுத்திவிட்டனர். அதில்வருமாபாசங்களபலவுள. அவற்றுள், சிலவற்றை யாம்கண்டிக்கப்புகுந்தேம், அவற்றைக் கல்விகேள்விச்சம்பத்துக்களும் அவற்றுணைய பேரறிவுமுடைய பெரியோர்கள்கண்டு களித்தருளுக" என்று ஓர்விசேடம் பகர்ந்தனர். கல்வி,கேள்வி, அறிவு என்னுமிவைகளையுடைய பெரியோர்களுக்கு இந்தத் (த) முதலியார் எமதுநாயகரவர்களது குற்றங்களை யெடுத்துக்காட்டுவானேன்? அன்னோர் தாமேகண்டுபிடிக்கமாட்டார்களோ? இவரைக்கண்டுபிடித்துக் காட்டச்சொல்லிக்கேட்டுக்கொண்டார்களோ? பிறர்குற்றங் காண்பதுதானோ பெரியோர்கடன்? இவர்காட்டுங்குற்றங்களை அன்னோர் கவனியார்களே. "பெரியோர்கள்" என்றுதம்மாற் புகழப்பட்டவர்கள் தம்மினும் பெரியோர்களா? எம்மினும்பெரியோர்களா? தம்மினும்பெரியோர்களுக்குத் தாம்புலப்படுத்துவது அவசியமன்று. தம்மினுஞ்சிறியோர்களை (அருளுக) என்று வேண்டியதுமிகை. அருளுகவென்பதன்பிரயோசனம் யாமெடுத்துக்காட்டியகுற்றங்களுக்காக எமக்குவெகுமானங்கொடுக்கவேண்டியது என்று கேட்டுக்கொண்டதேபோலும். இவரதுஆபாஸத்தைக்கண்டு பெரியோர்கள் சீ! சீ!! எனவெறுத்தொதுக்குவதே இவருக்கருளுவதாயிற்று.

இதுநிற்க, நமது த-முதலியார் எங்கள் விளக்கத்தில் (குருப்யோந்நமஃ) என்று யாம் எழுதிக்கொண்டதில் (ந்) என்னும் எழுத்து மிகையென்றுகாட்டிக் கைகொட்டிச்சிரித்தார். அது அச்சுப்பிழையெனக்கொண் டொதுங்காமலஃதொருபெரியசங்கதியாக வவர்பிரஸ்தாபித்ததைநினைந்து அவருடையசிரமத்துக்காக ஊரிலுள்ள நாகதாரிப்புதர்களையெல்லாம் அவருக்குயாம் தானம்பண்ணிவிட்டோம். அன்றியும், அவரொமது பிழையைக்காட்டவந்ததில் "நகரவொற்றுமிகுத்தியது" என்பதேபோதுமானதாயிருக்க "மிகைபடமிகுத்தியது" என்றதிகமாகக்கூறித் தாம் சிரிப்புண்டதை வெளிப்படுத்திக்கொண்டார். இனியிதுவழுவினதன்றென்று தமது வழுவழுவிலக்கணத்தைக்கொண்டு கிகியென்னு முதாத்தசத்தத்தோடு தமது தலையாட்டிமுதன்மாணுக்கருக்கும், ஏனையோருக்கும் பிரசங்கிப்பார்போலும். அங்ஙனமவர்செய்யப்புகின், யாமவர்மாட்டுச் செய்யப்புகு முத்தித்துணையொன்றுண்டு. அதாவது இதுவரையிலான்றோர்கள்செய்து வெளிப்படுத்திய விலக்கணநூல்களிலுள்ள சுருக்கல்-விளக்கல்-விரித்தன்முதலியவைகளைச் சுருக்கம்படச்சுருக்கல், விளக்கம்படவிளக்கல், விரிவுபடவிரித்தல்முதலியனவாக வொருவருமறியாமற் றிருத்திவைத்தலோடு அவரது கோட்பாட்டுக்குத்தக்கபடி யோரிழவிலக்கணநூல் கற்பித்துலகமெங்கும் பரவச்செய்தலேயாம். இங்ஙனஞ்செய்த லேனையோர்க்குச் சாத்தியமன்றாயினும் அது இரண்டுவரியெழுதுகையிலேயே யிவ்வளவுசாமர்த்தியத்தைக் காட்டு மிக்கிகிப்பிரசங்கியாருக்கெளிதேயாம்.

இனி "ஞானம் என்பது அறிவு" என வெமதுநாயகரவர்கள் கூறியதைப் பிரஸ்தாபித்து "இவ்வளவுபெரியவருமையைவிளக்கிய இப்பிரசங்கியாருக்குச் செய்யத்தக்ககைம்மாறென்னையோ" என நமது த-முதலியார் பரிகசித்தார். ஞானம் என்பது வடமொழியாலகையால், அதனை நாயகரவர்கள் தென்மொழியால்விளக்கினர். பின்னரவற்றின் பாகுபாடுகளையும்விரித்தனர். ஒருமொழியினதுபொருளைப் பிறிதுமொழியால் விளக்குவது ஆன்றோர் பலர்க்குந்தொன்றுதொட்டுவழங்கிவருமரபென்றறிக. இது நமது த-முதலி

யாருக்குமாத்திரம் அருமையாயிராது. ஏனெனின், அவர் (பொருள் இரண்டுவகைப்படும். அவை கல்விப்பொருள் செல்வப் பொருள்) என்றுகூறிப் பெரியவருமையை விளக்குபவராகையால். அவரருமையில் நாயகரவர்களது அருமை யெம்மாத்திரம்? அவரருமையல்லவென்பதுகொண்டே யெங்களருமை யருமையாகாமற்போகாது. யாம் அதனை யருமையென்று சொல்லவந்ததுமில்லை. அருமையுடையாருக்கு அருமைதெரியாமலும்போகாது.

நமது சு - முதலியாரைத் தோற்பாவையெனக்கொண்ட த-முதலியார் தமது மருள்வாசகத்தில் "அறிவை வருத்துக்கூறவந்தவர் வினாவொன்று விடையொன்று வெற்றென வருவித்துக்காட்டுவோனெவன்?" என்றதுமுதலிய சில வபத்தபஞ்சாங்கம்படித்து எமதுநாயகரவர்களைத் தூஷித்தார். ஒன்றன்பொருளைக் கடாவிடைகளால் விளக்குவது சேனாவரையர் முதலிய தொல்லாசிரியர்கட்குஞ் சிறந்ததாகவும், இவ்வேழைமுதலியாருக்குச் சிறவாது வெற்றெனவருவித்ததென்னுங்குற்றமாய்கின்றது ஆதித்தப்பிரகாசத்தாலந்தகாரமுண்டாயிற்றென்னு மறிவிலியினது விந்தையாகவேமுடிந்தது. அன்றியும், "என்னவறிவு என மேல்வினாவெழுங்கால் பாசவறிவு, பசுவறிவு, பதியறிவு என்னும்விடையுண்டாகும்" என வெமதுநாயகரவர்களெழுதியிருப்பது ஓர்பிழையுமெய்தாத பெருமிதவாசகமாய் விளங்கவும் அதனுண்மையை யுணரகில்லாது இவ்வாறு இவருக்குப்படிப்பித்தவர் யாரெனவும், இவரது சொற்களின்பிரயோகம் வழுவோ வழாநிலையோவெனக் கேட்டுத்தெளிக எனவும் நமதுமுதலியார் தம்முடையபுலமையை வெளிப்படுத்தியதோடு தமக்குப் படிப்பித்த பரமார்த்தகுருவைபவத்தையும் பிரகாசப்படுத்திக்கொண்டனர். இப்பேதைக்கவிராயருக்கு அந்தவாக்கியம் பிழைபட்டதாகத்தோன்றின், அந்தப்பிழையை நியாயத்தானும், இலக்கணத்தானுமெடுத்துக்காட்டித் தம்முடைய கொள்கையை யிசையச்செய்தல்வேண்டும். அங்ஙனஞ்செய்யாது ஆறுமில்லாதவூரி லசுவமேதஞ்செய்தல்போல "இவருக்குப் படிப்பித்தவரார்? வழுவோ வழாநிலையோ கேட்டுத்தெளிக" என்று உளறியதே நியாயமும், இலக்கணமுமாகக்

கொண்டமையால், இவருக்கு இவ்வாக்கியமின்னதென்பது
ம், 'என' 'என்னும்' என்பனவாதிசொற்களினிலக்கண மின்
னதென்பதும் புலப்படவில்லையென்பதே துணிவு. அவ்
வாக்கியத்தினுண்மையுணர விவருக்குஆசையுண்டாயின்,
"கோடன்மரபேகூறுங்காலை" என்னும் ஸூத்திரப்படி எமக்
குச் சுச்ரூஷைசெய்வாரெனின், யாமவர்மாட்டுக் கிருபை
கூர்ந்து அவர்மந்தமதியினராயினு மதனையினிதுவிளக்கி
அவரை விந்தைமதியினராக்கிவிடுவோம். இது சத்தியம்.

இனி, "எம்மபரிபாஷை" என்று நாயகரவர்கள் கூறிய
து தவறுஎன்று நமது த-முதலியார் தொடங்கி, அதில்
"அகரவுருபுபன்மை, அதன்பொருள் பரிபாஷை ஒருமை" என
வியாயங்காட்டி மறுத்தார். "எம்மபரிபாஷை" என்புழி எம்ம
என்பது குறிப்புப்பெயரெச்சம். அது பரிபாஷையென்னு
ம் வினைமுதற்பெயரைக்கொண்டு முடிந்தது. அன்றியும்,
"எம்மபரிபாஷை" என்னும் ஆறும்வேற்றுமைத் தொகாநிலை
த்தொடரில் பரிபாஷையென்பது பால்பகா வஃறிணைப்பெ
யராகலின், பன்மைப்பொருளேற்றுக்கி அகரவுருபு விரிக்கப்
பட்டது. இவ்வுண்மையுணராது வீணேகுற்றங்கூறப்பு
குந்தவர் இனி "மரம்வளர்ந்தன" என்பதுங் குற்றமுடைத்
தென்றும், "தெரிநிலையுடையவஃறிணையியற்பெய, ரொருமையும்
பன்மையும்வினையொடுவரினே" எனவும், "பால்பகாவஃறிணைப்
பெயர்கள்பாற்பொதுமைய" எனவும்போந்தவிதியுங் குற்ற
முடைத்தெனவும், இங்ஙனங்கூறியுள்ளாராகிய ஆசிரியர்
தொல்காப்பியனாரையும், பவணந்தியாரையு மொன்று ம
றியாதவர்களெனவுங்கூறித் தமதஜ்ஞானாந்தகார ஜந்மப்
பிரகிருதிக்கேற்பத்தூஷிப்பார்போலும். எம்மபரிபாஷை
யென்னு மித்தொடர்மொழியில் வருமொழியொருமை
யாயிருத்தலின் அகரவுருபு தகாதென்று சொற்சுருங்கிப்
பொருள்விளங்க வெழுதத்தெரியாமல் "இத்தொடர் - ஒரு
மை" எனப் பொருட்பேதமுண்டாகச் சொற்களை மன
ம்போனவண்ணம் பிணைக்கவல்ல விப்பிடழிந்தபெயர்தா
மோ கல்விகேள்வியானமைந்த வெமதுநாயகரவர்களையு
ம், அவரது மாணாக்கர்களையுங் குறைகூறும் பண்டிதத்
திறமைபூண்டவர்? மேல்வாக்கியத்தில் எம்மவென்பதன்

கணுள்ள அகரம் ஒன்றேயாகவும், அகரவுருபு பன்மை யென்றமையாலும், பின்னரதனை யொருமைச்சொல்லாற் சுட்டினமையாலும், அவ்வகரவுருபின்பொருள் பரிபாஷையெனக்கூறினமையாலும், ஒருமைபன்மைகளையும், ஆறும்வேற்றுமையையும், அதனுருபுகளையும், அவற்றின் பொருளையு மிவருள்ளவா றுணரப்பெறாத மந்தரென்றே தீர்மானிக்கின்றேம். "எம்மபரிபாஷை" என்னுந் தொடர்மொழியில் வருமொழியாகிய பரிபாஷையையே அவ்வுருபிற்குப் பொருளாகவமைத்தவர் எனது குதிரை, எனது கழுதை, எனதுகால், எனதுகை என்னுந் தொடர்மொழியில் குதிரையையும், கழுதையையும், காலையும், கையையுமே அது வுருபிற்குப் பொருளாகவமைப்பர்போலும். அங்ஙனமாயின், அதனைக்கேட்ட அதிபாலிசருங் கைகொட்டிச்சிரித்து பரிகசிப்பார்களன்றே? ஆறும்வேற்றுமைக்குப் பரிபாஷையைப் பொருளாகக்கொண்ட விப்பாழ்ங்கவிராயர் எத்தனைபேர்குடியை வாழவைக்கவிருக்கின்றரோ அறியேம்.

இதுநிற்க, நமது த-முதலியார் பாசஞானம், பசுஞானம், பதிஞானம் என்னும் மூன்றுவகைஞானங்களையும் எமது நாயகரவர்கள்விளக்கியது பிசகெனவும்,தாம் தமது ஊத்தைவாயைத்திறந்து விளக்கியதே சரியெனவும் ஓர் ஜாலம்பகர்ந்தனர். இவ்விதமாக்வே யாழ்ப்பாணத்துப் பிள்ளைநாவலரும் பேசிக்கூசியொதுங்கினர். நமது முதலியார் பூர்வபட்சம்செய்ததற்கும், சித்தாந்தப்படுத்தியதற்கும், நியாயமும் பிரமாணமுங்காட்டாது மயங்கவைத்ததலால், அவரது போதம் எதமுற்றழிந்தது. அன்றியு மெய்ம்மைவிரோதித்த பூர்வபட்சிகளாகிய த - முதலியாரும், ச-நாவலரு மொருவர்சொன்னபடி யொருவர்சொல்லாமல் மாறுகொளக்கூறியது மன்னோர்கூற்று அவலமென்பதை நிலைகாட்டியது.

இனி "ஜடப்பொருளையன்றி" "சித்துப்பொருளையன்றி" என்பவற்றிலுள்ள ஐயுருபுகள் மிகையென வொன்றுகூறினர். இவ்வாறு மயங்கிக்கூறிய ஈழநாவலருக்கு யாம் தக்க

வெகுமானஞ்செய்திருக்கின்றனமாகையால், அதுவே வெகுமானம் நமது த-முதலியாருக்குந்தந்தருளினோம். அவர் தனையேற்று ஸுகிப்பாராக.

நமது ஸ்ரீகிப்பிரஸங்கியார் ரிதனோடேதொலையாமல் 'பெரியோரும்' என்பதிலுள்ளவும்மை யின்னவேதுவான் மிகையானதென்று காட்டாமல் "உம்மிகையென்பது இவருக்குத்தோன்றாமற்போவானேன்" என்று முழுநீளமெழுதி எமது நாயகரவர்களைத்தூஷித்தார். இனி யவ்வும்மை "சாத்தனும் வந்தான்" என்புழிக் "கொற்றன்வந்ததன்றி" எனப் பொருள் படுதல்போல "யாம்கூறியதன்றி" எனப்பொருள்படுதலின், உயர்வுசிறப்போடு இறந்ததுதழீஇய வெச்சவும்மையாகும். இதனுண்மை "எச்சஞ்சிறப்பே யையமெதிர்மறை - முற்றேயெண்ணே தெரிநிலையாக்கமென், றப்பாலெட்டே யும்மைச்சொல்லே" என்னுஞ்சூத்திரத்தானன்குணரக்கடவது. அன்றியும், திருக்குறளுக்குப் பரிமேலழகர்செய்தவுரையில் "என்றுபெரியாரும்பணித்தார்" எனவெழுதப்பட்டிருக்கின்றது. இதிலும் உம்மிகையென்றுகாட்டி மறுப்பார்போலும். நமது த - முதலியார் எம்மேலேற்றிய தோஷத்தைப் பரிமேலழகர்மேலுமேற்றிப் பலராலுஞ்சீகொட்டத்தக்க பரிசெய்தொரிதென்கொலோ?

இனி, "தன்மதமின்னதென்று காட்டவறியாதார் (பிறமதத்தர்) எனவருவித்தெழுதியது இவரதுகல்வியை யழகுபடுத்தியதுபோலும" என்று நமது சு-முதலியாரைப்பெற்ற த-முதலியார் வாதுகூறினர். எமது நாயகர்வர்கள் பதிபசுபாசங்களையறியுமறிவுகளே பதிஞானம், பசுஞானம், பாசஞானம் என்பனவாகத் தமதுகூற்றை வெளிப்படுத்தியபின்னரே "பிறமதத்தர் தத்தமக்கியைந்தவாறேகூறுப" எனக்காட்டினமையால் "தன்மதமின்னதென்று காட்டவறியாதார்" என்று தருக்கியொழிந்தது அவரது அதிகப்பிரஸங்கமேயாம். அவர் குளறியதுபோல் நாயகரவர்கள் குளறுமையே "தன்மதமின்னதென்று காட்டாவறியாதார்" என்று நமது ஸ்ரீமுதலியார் புலம்பவிடஞ்செய்ததுபோலும்.

இனிப் "பாசம் ஜடமாகையால், அது ஒன்றினையுமறியாது" என்று நாயகரவர்கள் கூறியதில் (அது) என்றொரு

சொல் இடையில்வருவித்தது அதிகம்என்று பிரஸங்கித்தனர். இவ்வாக்கியம் அநுமான நிலைத்தொடர்ஸம்பாவிதவிரியாகலின், "பாசம் ஜடம்" "அது ஒன்றினையுமறியாது" என்னு மிரண்டுசுயம்பிதங்களிலும் எழுவாய்கடோன்றிநின்று, முதற்சுயம்பிதத்திலுள்ள பாசமென்னுமெழுவாய் ஜடம் என்னுங் குறிப்புவினைமுற்றையும், இரண்டாவது சுயம்பிதத்திலுள்ள பாசம்என்பதைச்சுட்டிய அதுஎன்னும் எழுவாய் அறியாதுஎன்னு மெதிர்மறைவினைமுற்றையும் பயனிலையாகக்கொண்டுமுடிய வழாநிலையாய் நிற்கவும், இதனுண்மையை யாய்ந்துணராது "பாசம்அறியாது என்று முடிவுபெறுநிற்க,அதுவென்றொருசொல் இடையில் வருவிப்பானேன்?" என வாக்கியலட்சணந்தெரியாது நமது த-முதலியார் தமது மதியீனத்தை வெளிப்படுத்திக்கொண்டனர். இவருக்கீனமேது? மானமேது?

நமது த-முதலியார் மீண்டும் "பதியானது நிர்மலசித்தாகையால், அதுவும் ஒன்றினையும்றியாது" என்ற வாக்கியத்திலும் (அது) மிகையெனக் கண்டுபிடித்தார். இதற்கும் மேற்கூறிய நியாயங்களை யங்வயிந்துத் தம்முடைய அறியாமைக்கு ஆச்சரியப்படுவாராக. அன்றியும், அவர் "சித்துக்குப் பொருள்அறிவாக, சித்தாகிய பதி ஒன்றினையுமறியாதென்பானேன்?" எனவும், "பதிநிர்மலசித்தாதலின், எல்லாவற்றையு நிர்மலமாகவறியக்கூடுமே" எனவும் தமது சைவத்திறத்தைக் கொஞ்சங்காட்டினார். இவ்வவலக்ஷணபண்டிதர் "ஞானம் என்பது அறிவு"என விளக்குதல்வேண்டுமோவென வெம்மைக்கட்டாவிப் பரிகசித்ததைமறந்து "சித்துக்குப் பொருள் அறிவாக" என்று ஈண்டுத்தாம் விளக்குமாறுகியதென்னை? சித்தாகியபதி ஒன்றினையுமறியாது என்பதனுண்மை "தன்னையறியாது" என்னு மொழிவிலொடுக்கத் திருவெண்பாவானும், அதனுரையானும்பெறப்படுதலை நமது ஈழநாவலருக்கிசைத்தபடி யிவருக்குமிசைத்தோம். கண்டு ஸுகிப்பாராக.

இவ்வளவிலமையாது நமது சு-முதலியாருக்குத் தலையாகிய த-முதலியார் "பசுவானது மலசித்தாகையால் பாச

த்தோடுசேர்ந்து பாசமாயும், பதியோடுசேர்ந்து பதியாயும் விளங்
கும்" என்றவாக்கியத்தில் "அது என்பதொருசொல்லை வருவித்
துக்கூற மறந்தார்போலும்" என்று எங்களைப்பரிகசித்தார். இ
வ்வாக்கியம் அநுமான நிலைத்தொடர்ஸம்பாவிதத்தொகை
யாகலின், எழுவாய் தோன்றாதுநின்றது. இஃது தொகா
நிலையாயின், மேல்வாக்கியங்களோடொப்ப விளங்கும். இ
வ்வுண்மையையுணராது தம்மேலேறவேண்டிய குற்றங்க
ளையெல்லாம் பிறர்மேலேற்றித்தருக்கியது அவரது அகந்
தையின்பயனென்க. இதற்குமேல், "பசுபாசமாயின், இவர்
மேற்கூறியபடி ஜடமாய்விடுமே. அப்பசு பதியாயின், ஏகான்மவா
தத்துக்கிடங்கொடுக்குமே" எனக்குளறித் தமது ஸாமர்த்திய
த்தைக் காட்டவந்தனர். "கட்டுமறுப்பும்" என்ற சிவஞான
போதத் திருவெண்பாவில், "அவனுளமாகில்லானுளமவனுமா
ட்டா, தவனுளமாயல்லனுமாமாங்கு" என்ற பகுதிக்கும், "கல்
லாலின்" என்ற திருவிளையாடற்புராணத் திருவிருத்தத்தி
ல் "எல்லாமாயல்லதுமாய்" என்ற பகுதிக்கும் நமது தமிழறி
ஞரா ரிவ்வாறேபொருள்விரித்துப் புலம்பியழிவார்போ
லும். இவ்வாறு புறச்சமயிகளும் புலம்பார்களே. இவர்
"உலகெலாமாகிவேறா யுடனுமாய்" என்ற சித்தியாருக்குமென்
னசெய்வார்? இவற்றினுண்மைதெரியவேண்டி னெம்பாற்
சரண்புகுந்திடுவாராக.

இனி, "உண்மையில் பசுவானது பாசமுமல்ல பதியுமல்ல"
எனநாயகரவர்கள்கூறியதில், அல்லவென்னுஞ்சொல்லான
து அதனெழுவாயைப்போ லொருமையாயிராது பன்மை
யாயிருத்தல் தவறுடைத்தென்கிறார். இவர் இலக்கணக்கட
லை த் தம்மையெண்ணி யிறுமாந்து குரைப்பதொழிய
வேறில்லையாகையா லிவரது அகந்தைக்குத்தக்கவிடைதந்
திடக்கடவாம். அல்லஎன்பது அன்றென்னு மெதிர்மறைக்
குறிப்புவினைமுற்றின் பன்மைச்சொல்லாயினும், இதுவே
று, இல்லை, உண்டு, யார், வேண்டும், தகும், படும் முதலிய
வற்றோடொருபுடையொத்து அவனல்ல,அவரல்ல,அதுவ
ல்ல, அவையல்ல,நானல்ல,நாமல்ல,நீயல்ல, நீவிரல்லவெ
ன வுலகவழக்கினுள் இருதிணைநாற்பான் மூவிடங்களினு
ம் வழுவமைதியாக வழங்கிவருதல் கண்டுதெளிக. அதனை

ச் சற்றுமுணராது சிறியாருங்கேட்கத்தகாத வீண்கேள்விகளைக்கேட்டு எமக்குச் சிரமங்கொடுப்பதோடு தாமுங் துக்கிப்பது அவருக்குத் தவமாகமுடிந்தது. தாயுமானவர் "போராட்டமல்லவோபேரின்பமுத்தியிப் பூமியிலிருந்துகாண" எனவும், "தேகநிலையல்லவேயுடைகப்பல்கப்பலாய்த் திரையாழிபூடுசெலுமோ" எனவுங்கூறியுள்ளாராகலின்; அது செய்யுள்வழக்கானும் நிலைபெற்றது. அதற்கு "ஒருமையிற்பன்மையும் பன்மையினொருமையும், ஓரிடம்பிறவிடந் தழுவலுமுளவே" என்னுஞ்சூத்திரம் பிரமாணமாதலிவரறியார்போலும். இவரதறியாமை மிகக்கொடிது அந்தோ! அந்தோ!!

அன்றியும், நமது க-முதலியார் எமதுநாயசரவர்கள் (உண்மையில் பசுவானதுபாசமுமல்லபதியுமல்ல) என்றுகூறியதி லோர்பிழைகண்டுபிடித்தார். என்னெனின், "இஃது உண்மையென்றவழி முன்கூற்று இன்மையோ" என்றுகடாவியதேயாம். இவ்வீணருதர்க்கமிவர்போன்ற படிப்பாளிகளல்லாத பரமார்த்தகுருவின் சீடர்களுக்கேயன்றி ஏனையோர்க்குப் பயன்செய்யாதென்க. இம்மகாவித்வான் தம்மைத் தர்க்கசாஸ்திரநிபுணரெனக் கனக்கண்டு வாய்பிதற்றினராகையால், இவர்பிதற்றும்யாவும் அந்தக்கணக்கிற்செல்லாவொழிந்தன. இவரிங்ஙனந்தருக்கித்தது கௌதமசூத்திரங்கொண்டோ? கணாதசூத்திரங்கொண்டோ? அறியேம். இனி யிவரிவ்வேதுவான், இந்நூல் (உண்மைவிளக்கம்) எனின், மற்றுள்ளனவெல்லாம் (இன்மைவிளக்கமோ) எனக்கடாவித்தொலைப்பார்போலும். இன்னுமிவர் தமது விபரீதப்புலமைக்கேற்ப (உண்மையில்) என்பதற்கு (உண்-மை-இல்) எனவும், (உள்-மை-இல்) எனவும் (உண்மை-இல்) எனவும் பதம்பிரித்துத் தாம் எண்வகைப்பொருள்கோளுக்கும்புறம்பாகப் புதுவிலக்கணமாகக்கற்பித்துக்கொண்ட அவரோகணவிருத்திப்பொருள்கோளால் முதல்பிரித்ததற்கு "வீட்டில் ஆட்டைத்தின்று" எனவும், இரண்டாவது பிரித்ததற்கு ஆரோகணவிருத்திப்பொருள்கோளால் "(அப்படித்தின்றபோதினும்) வயிற்றினுள் அவ்வாடு இல்லை" எனவும், மூன்றாவது பிரித்ததற்கு ஷை பொருள்கோளாற்றானே "சத்தியம்இல்லை" எனவும் பொருள்கூறித் தமதுவிபரீதத்தை வெளிக்காட்டிச் சிசி

யெனவெறுக்க வுடம்படுப்பார்போலும். இவ்வளவிலமையாது "பசுவென்பதொருபொருளிருக்க, பாசமன்றுபதியன்று என்பானேன?" என மீண்டும்வினவித்தொலைத்தார். இது, வெள்ளியானது இரும்புமல்ல பொன்னுமல்லவென்புழி, வெள்ளியென்ப தொருபொருளிருக்க,இரும்பன்று பொன்னன்று என்பானேன் என்னுமோர்மூடனது கூற்றோடு தானே முட்டின்றிமுடிந்தது. இவ்வாறுவினுதல் "அறிவறியாமையையுறல்கொளல்கொடை,யேவறரும்வினவாறுமிழுக்கார்" என்னுஞ்சூத்திரப்படியமைந்த அறுவகைவினக்களுள் எவ்விதவினவோ? இவற்றிலெதனுளந்தர்க்கதமோ? இவற்றிற்கதீதமோ? எவ்விலக்கணநூலிற்கண்டதோ? எந்தத்தர்க்கநூலானமைந்ததோ? இன்மை - அன்மை என்னுமெதிர்மறையிரண்டற்குமுள்ள பேதந்தெரியாது மயங்கிவாதாடுமிப்பேதைமுதலியாருக்கு யாமென்னென்று புத்திசொல்வது! "பசுவானதுபாசமுமல்ல பதியுமல்ல" என்று, எமதுநாயகாவர்கள்கூறியது பாசத்தின்குணமேபசுவெனவும், பதியினதுகூறே பசுவெனவுங்கூறுஞ்சமயிகளை மறுத்தற்பொருட்டு. இவ்வாறுதெளிந்திடாது கீகீயென்றுபேசவந்தால் சீசீயென்று ஏசார்களா! இனியேனுங் குணப்படுவாராக. இவ்வாறு குளறிவழியுமாபாஸங்களுக்கெல்லாம் யாம்பதில்கூறிக்கொண்டு காலங்கழிப்பது எமக்குப்பெருந்துக்கமாயிருக்கின்றது. யாம் எடுத்துக்கொண்ட பிரமேயத்தையநுஸரித்து எவ்வளவுவிவகரிப்பதாயிருந்தாலும் நியாயத்தைநோக்கி விடாதுபிரவர்த்திக்கலாம். அஃதொன்றுமின்றித் தண்டத்துக்குமாரடிப்பதாயிருத்தலாலும், அதுசெய்தலால் பிறருக்கோருபகாரமுமுண்டாகாமையாலும், நூல்விரிந்து விஷயஞ்சுருங்குகின்றமையாலும் இனிவிஶ்ராந்தியைத் தேடுவதே யுசிதமாயிருக்கின்றது. நமது முதலியாரதுசெருக்கையடக்குவது மோருபகாரமாகையால், இதுகாறும் யாம் பிரவர்த்தித்தோம். இன்னுமிரண்டொரு இலக்கணத் தப்புகளைமாத்திர மெடுத்துக்காட்டிக்கழித்து நமது த-முதலியாரைத்திருப்திசெய்வித்துப் பின்னர் அவரது இருஞானஸ்தாபன மெம்மட்டினிலைக்கிறதென்னு முண்மையையுங்கொஞ்சம்விவகரித்துப் பரிஷ்கரிப்பாம்.

நமது த-முதலியார் (தேகேந்திரியப்பிராணாந்தக்கரணாதிகளையும், இவற்றோடுகூடியதன்னையும், இவைகளைநீக்கித் தனக்குபகரிக்கும்ப...யையும்) என்று நாயகரவர்கள்கூறியதில் ஓர்பெரும்பிழைகண்டுபிடித்தார். எவ்வெனின், ('தன்னை' 'தனக்கு' என்னும் பொதுப்பெயர்கட்குத் திணையின்னதென வித்தொடர்மொழியிற்காட்டாது இவற்றைமாத்திரமெடுத்து வினையாளுவானேன்) எனச்செருக்கிவரைந்ததேயாம். இங்ஙனம்வினாவியவர்தாமே "பாசத்தையும்பதியையுமறிவதனோடொப்பத்தன்னையும் வேறாகவறியவேண்டுமோ?" என வொன்றுகுளறினர். இதில், திணையின்னதெனக்காட்டாது நன்னையெனப்பொதுப்பெயரைமாத்திரங் காட்டியவாறென்னை? திருக்குறளையெழுத்தெண்ணிப்படித்தவரெனத் தம்மைத்தாமேவியந்தகங்கரித்திருக்கு மிவருக்கு "ஏதிலார்குற்றம்போற்றங்குற்றங்காண்கிற்பிற்-றீதுண்டோமன்னுமுயிர்க்கு" எனவும், "பிறன்பழிகூறுவான்றன்பழியுள்ளும், திறன்றெரிந்துகூறப்படும்" எனவும் வருஞ் செய்யுட்களின்கருத்து விளங்காமற்போனது பெருங்களங்கமேயாம். இனித் திணையின்னதெனக்காட்டாது பொதுப்பெயரைப் பிரயோகித்தல்கூடாதென்பது எவ்விலக்கணத்திற் போந்தவிதி? அங்ஙனமோர் விதியுளதாயின், அதனை நேரேயெடுத்துக்காட்டித் தமதுண்மையைச் சாதித்தல்கடன். அங்ஙனமின்மையானும், தாங்காட்டியகுற்றங்களி லொன்றற்கேனும் அற்பநியாயமுங்கூறாமையானும், இனி யிவர் தம்மனம்போனவண்ணமெல்லாம் பிணங்கியுரைத்துத் தொல்காப்பியமுதலிய நூல்களினுண்மையிற்றடுமாற்றமெய்தியலைவார்போலும். இப்போலியிலக்கணப்புலவர்க்கு வெளிப்படையொன்றே ஸம்மதமும், ஏனைக்குறிப்பு அஸம்மதமுமாயின், (எம்பிரான் - தம்பிரான் - தற்பரன்) என்றற்றொடக்கத்துத் தொடர்மொழிகளிலும், "தன்னையறியாது" என்னுமொழிவிலொடுக்கச்செய்யுளிலுந் திணையின்னதெனக்காட்டாமைக்கு என்செய்வார்? இவற்றையுந்தப்பென்றேகூறித் தலையிலடித்துக்கொள்வார்போலும். அந்தோ விவரதுபாவ மளவிடற்கரிது. இனியிவ்வீணிலக்கணப்புலவர் இரண்டாம்வேற்றுமைவிரியாகவும், நான்கா

ம்வேற்றுமைவிரியாகவும்வந்த அத்தன்னை-தனக்கு என்பன இருதிணைமுக்கூற்றொருமைப் பொதுப்பெயராகிய தானென்பதின் விகாரச்சொற்களெனவும், அவையீண்டுப் பொருளொக்கத்தால் ஆன்மாவை யுணர்த்தினவெனவும், அங்ஙனம்பிரயோகித்தல் வழுவன்றெனவுமறிந்து குணப்படுவாராக. தன்னை-தனக்குஎன்பன பொருளொக்கத்தா லான்மாவையே சுட்டினவென்பதுணரப் (பசுவாகிய தன்னையறிவதனுனே தான்பாசத்தையொழித்துக்கொள்ளமாட்டாது) எனவும், (பசுவாகியதன்னையும்பசுவறிதல்) எனவும்வெளிப்படையாகப் பிற்பகுதியில் எமதுநாயகரவர்கள் விளக்கியிருக்கும்வாய்மையானு முண்மைதெளிந்து சுகிப்பாராக.

இனி "பாசத்தையும், பசுவாகிய தன்னையும் பசுவறிதல் அவற்றின்றன்மையறிந்ததன்று" என்றுயாம்கூறியதில் "அறிதல் என்பதற்குமுடிவுஎங்கேதேடிவைக்கப்பட்டது" எனவும், "தன்று என்னுமெச்சத்திற்குமுற்றெது" எனவும் வினவித்தொலைத்தார். அவரதுபாவம் வழிவிட்டவாறிது. நமது கிகீப்பிரஸங்கியார் முழுஆபாஸப்பெட்டகமாய் விளங்குகிறூர். அவரது ஆபாஸத்தை யெவ்வளவென்றுதான்விரிப்பது? அவரதுவினு அறுவகைவினுக்களுள் அறிவினுவோ, அறியாவினுவோவெனச்சங்கித்தவழி அக்கவிராயர் அவ்வாக்கியத்திலுள்ள வெழுவாயின்னது, பயனிலையின்னது என்று கண்டுபிடிக்கமாட்டாத விலக்கணியாயினுராகவி னறியாவினுவென்றே நிச்சயமாயிற்று. இனி யிவ்வாக்கியத்திற்குப் பசுவென்பதெழுவாயும், "தொழிற்பெயர்வினைமுதற்செயப்படுபொருளே-கருவியிடம்பெயரெச்சமுற்றுகலும்" என்னும் ஸூத்திரப்படி "மெய்யீறெல்லாம்புள்ளியொடுநிலையல்" எனவும், "யாதெனிறுதியுஞ்சுட்டுமுதலாகிய- ஆய்தவிறுதியுமன்னொடுசிவணும்-ஆய்தக்கெடுதலாவயினுன" எனவும், "முதலீறெண்ணினொற்றுகரமாகும், உகரங்கெடுதலாவயினுன" எனவும், வருவனவற்றின் பயனிலைகள்போல முற்றுப்பொருள்பட்டுநிற்கும் (அறிதல்) என்னுந்தொழிற்பெயர் பயனிலையாகவுநிற்க, எச்சங்கள் வினைவிகற்பங்களெல்லாவற்றோடு மூ

டியுமென்பது ஸித்தமாகலின், "தள்ள" என்னுங் காரியப் பொருட்டெதிர்காலச் செயவென்வாய்பாட்டுவினையெச்ச மத்தொழிற்பெயரோடுமுடிந்தது. அன்றியும், "அறிதல்" என்பதை யெழுவாயாகக்கொள்ளுங்கால் தொக்குநின்ற ஆம் என்னுமாக்கவினை பயனிலையாதலும் அமையும். இவ் வாறுதெளிந்திடாது கூபமண்டூகம்போல நமது த-முத லியர்கத்தியது அவருக்குத்தலைவலியும், விதியுமாயின.

இனி நமது மூடக்குஸந்துப்பிரஸங்கியார் "பசுவின துபரிபாகமு மவ்வவ்வளவினிறுத்துகையால்" என்று நாயகரவ ர்களெழுதியதற்கு "அவரும் அவர்மாணாக்கருமே பொருள்சொ ல்லவல்லுநர்" எனப்பரிகசித்தார். இவ்வாறுபுலம்பினவர் நமது த-முதலியாரேயாகையால், அவரும், அவர்மாணாக் கருமே அதற்குப்பொருள்சொல்ல வறியாதவராயினர். நமதுமுதலியார்கூறு மொவ்வொன்றுந் தூஷணங்களாயி ருப்பனவன்றி நியாயமும், பிரமாணமுமேற்கொண்டு நிலை பெறுமையா லவற்றைக்கண்டு விவேகிகள்பலரும் வெறுக் கின்றனர்.

இதுநிற்க, "சத்திநிபாதர்க்கன்றிப்பதியையறிவதுகூடாது" என்று எமதுநாயகரவர்கள்கூறியதில், "சத்திநிபாதர்நால்வ ருமேபதியையறிவதுகூடுமெனப்பொருள்படுகின்றதே. இஃதுண் மையோ?" என நமது சு-வும், த-வுஞ்சேர்ந்து புலம்பின. இஃதென்னமடமை? அவையிரண்டுஞ்சேர்ந்து கடாவியத ற்கு (இஃதுண்மையே) என யாம்விடைகூறின், அவையென் செய்யும்? அச்(சு)வும், (த)வும் தாம் உண்மை, உண்மை யல்லவெனத் தாபித்தற்குரிய நியாயங்களையும், பிரமாணங் களையுந் தமதுவழுவாசகப்பிறலிற்காட்டாமையானும், மற் றெப்படி யாமெழுதவேண்டுமென்பதை விளக்காமையா னும், சத்திநிபாதர்நால்வருமேயென்னும் பிரயோகமொ ன்றையே செய்தமையானும், தமக்குச்சத்திநிபாதர்நால்வ ரென்பது தெரியுமென்பதை வெளிப்படுத்திக்கொள்ளவே யவைபிரவர்த்தித்தனவென்க. சிவனடியார்களே சிவனைய

சைவார்கள் என்புழிச் சரியை கிரியை யோகஞானங்களை ப்பெற்றுவாழுநால்வருஞ் சிவனடியாராயினும், அவருண் ஞானிகளையே சிவனடியாராகத் தெரிந்துகூறுதல்போல மந்ததரம்-மந்தம், தீவிரம்--தீவிரதரம், என்னும் பேதங்களையுடையசத்திநிபாதர்தம்முளீண்டுத் தீவிரதரச்சத்திநிபாதரையே ஸத்துக்களறிந்து கூறுவரென்க. இடத்துக்குத்தக்கவாறு பொருள்கொள்ளுதல் கற்றவர்க்கேயன்றி மற்றவர்க்கேலாமையால், நமது சு-வும், த-வுந் தமதுகல்லாமையாற் றம்பக்கனிறைந்துள்ள பொல்லாமையைக்காட்டி நிட்டின.

இவ்வளவிலமையாது நமது நவீனசைவபண்டிதர் "அறிவுநால்வகைப்படும் என்றதென்னை? அது எழுவகைப்படுமே" என்றுதொடங்கி, "ஞானவேள்வியைந்தனுள் ஓதலும், ஓதுவித்தலும் கேட்பித்தலுமாகிய இம்மூன்றும் இந்நாயகர் அறிவைக்கூறிட்டுவிழுங்கிவிட்டனவோ" எனத் தமதுசாத்திரப்பிரஜ்ஞையைக் கொஞ்சம்புலப்படுத்தினர். ஞானம் நால்வகையென்று யாம்கூறினும். ஞானம் எழுவகையென்று அவர்கூறினர். அவர்ஞானம் ஏழென்று கூறியதேயன்றி அதற்குப் பிரமாணங்காட்டிலர். உடனே ஞானம் ஐந்தென்றார். இவ்வைந்தில் இரண்டைத்தள்ளி மூன்றைக்கொள்ளென்றார். இம்மூன்றையுஞ் சிவஞானமுனிவர் ஞானமன்றெனத்தள்ளினர். ஐந்து-ஆறு-எழுமுதலிய ஞானங்களை யீழத்தீவினின்று கப்பலிலேற்றிக்கொண்டுவந்து விலைகூறிய நமது பிள்ளைநாவலரிடம் இந்தமுதலியார் (ஏழு) என்னுஞானத்தை விலைகொடுத்துவாங்கி லாபத்துக்கு விற்கவந்தார் போலும். "காக்கையுகக்கும்பிணம்" என்பதேயீண்டமைவுடைத்து. "மேற்கூறியஞானவேள்வியைந்தனுள் முன்னையமூன்றினு மாசிரியனறிவுறக்குமுண்மைஞானம் நிகழாமையின், உண்மைஞானமெனப்படுவன ஏனைக்கேட்டல் சிந்தித்தல்களும், சிந்தித்ததனைப்பின்னர்த்தெளிதலும், தெளிந்தவாறே யதன்பினிட்டைகூடுதலுமென்னு நான்கேயாம்" என்று சிவஞானமுனிவர்விளக்கியவாய்மையை யீண்டெடுத்தெழுதினும். இம்மட்டோ, நமது த-முதலியார் (முன்கூறியமூன்றேடு கேட்டலாதி

நான்கினையுங்கூட்டி எழுவகையென இறைவனூல் ஓதாநிற்க, இவர் நான்கென்றேவவையறுப்பானேன்) என் ... தாமெழுத்தெண் ணிப்படிக்தவர்போற்கூறி எழுஞானத்தைச்சாதித்தார். இறைவனூலோதாநிற்பதைத் தாங்கண்டவழி யதனைப்பலரறியவெடுத்துக்காட்டிச் சாதியாததென்னை? சிவஞானமுனிவர் ஞானங்களல்லவெனவொதுக்கிய கேட்டலாதிமூன்றுமெவ்விறைவனூலில் ஞானங்களெனச் சேர்க்கப்பட்டிருக்கின்றனவோவறியேம். இனியேனும் இவரதுவிபரீதம் விலகி ஸுகிப்பாராக.

இனி, "சிவனடியே" என்னும்பாட்டில், "சிந்திக்கும் என்றொருசொல்வந்ததினால், அதனைச்சிந்தித்தல் என்று எடுத்துக் கொண்டு ஏனைக்கேட்டலாதிமூன்றினையும் வருவித்துக்கற்பித்தகற்பனை" தெக்கணமூர்த்தியென்றவளவில் வடக்கணமூர்த்தி-கிழக்கணமூர்த்தி - மேற்கணமூர்த்தியெனக்கொண்ட மூடன்கதையோடொக்குமென்று நமது த-முதலியார் எங்களைத்தூஷித்தார். இந்தவுபமானம் நமது முதலியாரெடுத்துக் கொண்டவுபமேயத்தைச் சாதிக்கமாட்டாது. எங்ஙனமெனின், தெக்கணமூர்த்தியென வோர்சிவமூர்த்தமிருப்பதுபோல வடக்கணமூர்த்திமுதலிய சிவமூர்த்தங்களில்லை, சிந்தித்தல் என்னுமோர் ஞானமிருப்பதுபோலக் கேட்டல்-தெளிதல் - நிட்டையென்னு ஞானங்களிருக்கின்றன. இல்லாத வடக்கணமூர்த்திமுதலியவைகளைக் கற்பித்துக்கூறும் ஓர்மூடனுக்கும், கேட்டலாதிகளை யுள்ளவாறுகூறும் எங்களுக்கும் ஸாம்யங்கூறவந்த நமது த-முதலியாரை அந்த மூடனுக்கு முதற்றமையனாகிய முழுமடையனென்றே சமங்கூறத்தகும்? சிந்திக்கும் என்னுஞ்சொல்லால் சிந்தித்தலைக்கொள்ளுதல்போலக் கலை, மெய் என்பனவைகளால் கேட்டல் நிட்டை இவைகளைக் கொள்ளலாம், கொள்ளக்கூடாது என்னுமுண்மை பண்டிதசபையேறினலன்றே வெட்டவெளியாகும்? மூலையிலிருந்து முணுமுணென்றுபேசுவதிலென்னபயன்? பிறவியையறமாற்றும்பாங்கினிலோங்கிய ஞானம் தெளிதன்ஞானமாகவிளங்குமென்பது மேல்மூன்

றுஞானங்களையுமுணர்ந்தார்க்கு முட்டின்றிமுடியும். இவ்வாறு உண்மையைப்பயக்குஞானபேதங்களைப் பிரத்யக்ஷமாகயாங்காட்டக்கண்டும், அவைகளுக்குக்காட்டாகக் (கேட்டலுடன்சிந்தித்தறெளிதனிட்டை கிளத்தலெனவீரிரண்டாங்கிளக்கின்ஞானம்) எனப் பதிநூல்கூறக்கேட்டும் அந்தோவவ்வவிதிமுதலியார் விரோதம்பேசியது அவரதுபாவத்தின் விக்ஷைதயேயாம். உள்ளவாறே பிரதிபதங்களாற்பொருள்கூறி ஞானங்களைவிளக்கியருளிய வெமதுநாயகரவர்களை அம்மூர்க்கமுதலியா ரெப்படிமனம்வந்து தூஷித்தாரோ ஆச்சரியம்!

இனி நமது த-முதலியாரும், அவர்தஞ்சுங்கூடியோர்வாய்மைமறைந்தார்கள். என்னெனின், "சிவனடியே" என்னும்பாடலில் சிந்தித்தலாகிய மநநம்முதலிலும், நிதித்யாஸநமாகிய தெளிதலிரண்டாவதிலும், சிரவணமாகிய கேட்டல் மூன்றாவதிலும்வந்தமையால் அவைபிசகெனவும், சேக்கிழார்சுவாமிகள் முறைபிறழக்கூறினரெனவும், மிகைபடக்கூறலும், மயங்கவைத்தலும், வெற்றெனத்தொடுத்தலுமாகிய குற்றங்கள்பொருந்த விடங்கொடுக்குமாயின் முறைபிறழ்வது பெருங்குற்றமாய்முடியுமெனவும், இலேசாகவறியவேண்டியவற்றை முறைபிறழ்விப்பது அடாதெனவும், முறைபிறழத்தொடுத்திருக்குந்தொடை பெரியபுராணத்திலோரிடத்திலுங்கண்டதில்லையெனவும் நியாயங்காட்டியதேயாம். செங்கிரானையர் - ஈழநாவலர் என்னுமிவர்கள் முறைமாற்றங்கூடாதென்று புலம்பியதற்குத் திருக்குறள், திருவள்ளுவமாலை, திரிகடுகம் என்னும்பெருநூல்களிலிருந்து பிரமாணங்களெடுத்துக்காட்டி அவர்களையோயச்செய்தோம். அந்தப்பிரமாணங்களைக்கண்டபின்னருங் காணாதவர்போலபிநயித்து நமது த-முதலியாரும், அவர்பேணைவாருஞ் சு-முதலியாரு மீண்டவர்களுடைய வக்கணையக்கற்றுக்கொண்டழுதது சீசீயென்றேசவே சிறந்தது. முறைபிறழக்கூறுவதான் மிகைபடக்கூறன்முதலிய குற்றங்களுண்டாயின், அம்முறைமாற்ற மிழுக்கேயென்ற நியா

யத்தையுங் கொஞ்சம்யோசிப்பாம். யாம்முறைபிறழவமை
த்துப் பொருள்கூறியதால் மிகைபடக்கூறலும், மயங்கவை
த்தலும், வெற்றெனத்தொடுத்தலும் எங்கேநிலைபெறுயின?
இப்பெரும்பேயர்கள் புலம்பியதே மிகைபடக்கூறன்முதலி
ய குற்றங்களுக்கிடஞ்செய்தது.

எங்ஙனமெனின், இவர்கள் அந்தப்பாட்டுக்கு நிர
னிறைப்பொருள்கோள்வகையால், "சிவனடியேசிந்திக்குந்தி
ருப்பெருகுசிவஞானம் உவமையிலாக்கலைஞானமாம், பவமதனைய
றமாற்றும்பாங்கினிலோங்கியஞானம் உணர்வரியமெய்ஞ்ஞானமா
ம், இவற்றைத் தலைமுதல்வர்சம்பந்தர் தாம்அந்நிலையில்உணர்ந்தார்"
எனமுடித்துக்காட்டினார்கள். இதில், சிவஞானமுங்கலைஞா
னமுமபேதமாகியவற்றின்பேதந்தோன்றாமையாலும், அப்
படியேபாங்கினிலோங்கியஞானமும், மெய்ஞ்ஞானமுமபே
தமாகியவற்றின்பேதந்தோன்றாமையாலும் மயங்கவைத்
தலென்னுங்குற்றம் மன்றுடிநிலைத்தது. சிவனடியேசிந்தி
க்குந் திருப்பெருகுவதுகலைஞானமும், பவமதனையறமாற்
றும்பாங்கினிலோங்குவது மெய்ஞ்ஞானமும் ஆம் என்று
கூறுவதே போதுமானதாயிருக்க (கழுதை-கழுதையாகு
ம்) என்பதுபோல (ஞானம்-ஞானமாகும்) என முடித்துக்
காட்டினமையால், அது மிகைபடக்கூறலும், வெற்றெனத்
தொடுத்தலும், கூறியதுகூறலும், மாறுகொளக்கூறலுமா
கிய குற்றங்களை நிலைபெறுவித்தது. இன்னபலகுற்றங்கள்
குடிபுக நமது த-முதலியாரும், அவர்குஞ்சுங்கூடிபுனை
த்ததப்புரை அவலப்பட்டதறியாது எமது நாயனாவர்கள்
கொண்ட யாற்றுநீர்ப்பொருள்கோளை வீணே புனைகூறி
யது அப்பெரியமுதலியாருஞ் சிறியமுதலியாருமே புனை
யுடையாரென்பதை யினிதுபொலிவுறச்செய்தது. நிரனி
றைப்பொருள்கோளா லித்தகையபலதோஷங்கணிறைந்து
அருண்மொழித்தேவர் திருவாக்குக்கிழுக்குண்டாயினதன்
றியு மந்நிரனிறைப்பொருள்கோளு மதினில்லாதழிந்தது.

இனி "இல்லாதகூறியவேண்டியவற்றை முறைபிறழ்விப்
பதுமடாது" என்று நம்மவர்கள் கொஞ்சினார்கள். ஆகலின்;

இலேசாகவறிதலே யவர்சம்மதமாயிற்று. அங்ஙனமாயின், யாற்றுநீர்ப்பொருள்கோளால் இலேசாக நான்குமுடிவுக ளைப்பெற்றுத் தனித்தனிவிளங்கு ஞானங்களை நான்காக வேயறியாது நான்கையிரண்டாக்கிக் கிலுஷ்டகல்பநமாக நிரனிறைப்பொருள்கோளாலமைத்தறிவானெவன்? நான் குஞானங்களி லிரண்டுஞானங்களைச்சிதைத்து, அச்சிலைத வுண்டஞானங்களினுண்மையைத் தண்டத்துக்குச்சிதையா த ஞானங்களோடொட்டியொன்றாக்கிக் கஷ்டப்பட்டுநம் மவர்தேடுங் கரும்பொருளினுண்மையை யினியேனும்யோ சித்துப்பிணக்கறுவாராக. அன்றியும், அருண்மொழித்தே வர் முறைபிறழத்தொடுக்குந்தொடை பெரியபுராணத்தி லோரிடத்தினுங் கண்டதில்லையென்று பிணங்கிக்கூறிய வப் பேயர்கள் (கழுதை—கழுதை) என்பதுபோலப் பெரியபுரா ணத்தில் (ஞானம்—ஞானம்) என்னு மிந்தப்பிரயோகத்தைப் போல வேறுபிரயோகங்களை எத்தனையிடத்திற்கண்டுகூறி த் தமதுகட்சியைச் சாதித்துக்கொள்வார்களோ தெரியாது. நிரனிறைப்பொருள்கோளா லமைந்தசெய்யுட்கள் பெரிய புராணத்தி லின்னுமெத்தனையுள்ளனவெனக் காட்டுவார்க ளென்பதுந்தெரியாது. நம்ம த-வும், சு-வுஞ்சேர்ந்து எங் கண்மேலேற்றிய வஸம்பாவிதங்களெல்லாம் அந்தத் (த) வுக்குஞ் (சு) வுக்குமே சொந்தநிதிகளாயினமையால், இம் மட்டில்யாம் விப்ராந்தியடைந்தாம்.

இனி "இக்கேள்விமுதலியன வீட்டிற்கு நிமித்தகாரணமா கிய முதற்பொருளை யுணர்த்துதற்கு உபாயங்களேயாயிருக்க இவ ற்றை ஞானமென்பானேன்?" என்று நமது த - முதலியார் கொஞ்சியுரைத்தார். கேள்விமுதலியவைகள் உபாயங்களே யெனவும், ஞானமல்லவெனவும் எங்கேகண்டார்? எந்த ப்பாமரதடியனோ விவருக்கிவ்வாறு உபதேசித்தவன்? கேள் விமுதலியவை யித்தகையினவென் றிலக்கணங்கூறினவர் ஞானமுமித்தகையினதென் றிலக்கணங்கண்டு கூறுதலெ ங்ஙனே? முந்தியதற்கு நூலாதாரவும், பிந்தியதற்கு அஃதின் மையுங்கண்டு விவகரித்தார்போலும். ஐயோபாவம்! இவ

ரிவ்வளவிலமையாது "இவற்றை ஞானமெனக்கூறியநியாண்டு
பில்லையோவெனின், அஃதுண்டு; ஆயினும், உபசாரமே" என்று
உடனே சித்தாந்தப்படுத்தினார். கேள்விமுதலியன ஞான
மல்லவென முதலிற்புலம்பிவிட்டு,பின் அதற்குமாறாக வவ
ற்றை ஞானமெனக்கூறிய பிரமாணமுண்டு எனக்கூறியது
என்னபேதைமை! அவற்றை ஞானமெனக்கூறியநூலைக்க
ண்டும், அங்ஙனங்கூறிய துபசாரமென்று பிதற்றவந்த தெ
ந்தவாதாரவால்? அவ்வுபசாரமென்னுஞ்சொல்லை யெத்தனை
நாள் பட்டினிகிடந்து இவர்கற்றுக்கொண்டார்! அஃது
உண்மையன்று, உபசாரமேயென்பதைப் பிரமாணவாயி
லாகவும், நியாயவாயிலாகவுமன்றோ நிரூபிக்கவேண்டும்!
அஃதின்றித் தாங்குரைப்பதொன்றுஅபத்தமாயினும், அ
து உண்மையெனவும், தாங்குரைப்பதற்கு விரோதமாயுள்
ளது வேதமாயினும்,அது பொய்யெனவும்,எவ்வாறு பொ
ய்யென வதட்டிக்கேட்டா லுபசாரமெனவும் புலம்புவது
இவருக்கும் இவரன்னசிலகயவர்களுக்கு மியல்பாயிற்று.
இதற்கு யார்என்னசெய்யலாம்? இது அவர்களுக்கு அயனு
ரெழுதிய தலையெழுத்தென்றறிந்தொதுக்குவதே ஸாதுக்
கள் ஸம்மதமென்க.

இதுநிற்க, நமது சு-முதலியாரைத் தெருவில்விட்டு
த-முதலியார் "பரம் அபரம் என்று ஞானபேதங்களை யாமுமங்
கீகரித்திருக்கின்றோம். ஸ்ரீசேக்கிழார்கூறிய ஞானப்பாடலிலது
சேராதென்பதே துணிவு" என யாம் விளக்கிய வெங்கள் வி
ளக்கத்தில் விட்டிலெனவந்து வீழ்ந்துவிட்டார். இதற்கு
முன்னர் யாழ்ப்பாணத்திலிருந்து பறந்தோடிவந் திரண்டு
விட்டில்கள்வீழ்ந்து நிர்மூலமாயின. அவற்றோடு இவர் மூ
ன்றாவது பூச்சாயினர். இந்த மூன்றாவதுபூச்சுப்பறந்தவழ
கும்,பறந்துவந்து விளக்கைச்சுற்றி யலைந்தவழகும்,பின்ன
ரதிற் பொட்டெனவீழ்ந்து சட்டெனத்தொலைந்தவழகு மி
னிதுதெரிவிப்பாம். இச்சிறுபூச்சு "இவர் அங்கீகரித்திருக்கின்
ற அவ்விரண்டுஞானங்களினுண்மையையறியேம்; அதனால், இவை
அப்பாடலிற் சேரா வென்று கூறியகூற்றும், நான்கு சேருமென்று

கொண்டுகொள்கையும் பொருந்துமாறு சமாதானங்கூறுதும்" என
வாய்திறந்தது. சேக்கிழார்பாடலி லிரண்டுஞானம் சேரா
வெனவும், நான்குஞானம் சேருமெனவுங்கூறிய எமது
பட்சத்தை யெடுத்தநுவதித்த வச்சிறுபூச்சு அதனைமறுப்ப
தொழிந்து அவைபொருந்துமாறு ஸமாதானங்கூறுதும் எ
ன்றுபுலம்பியது என்னை? இரண்டுஞானங்கூடுமென்பது அ
தன்கொள்கை. இரண்டுஞானங்கூடாவென்பது எமதுகொ
ள்கை. யாங்கூடாவென்பதையே அதுவும்பொருந்தச்செய்
யுமாயின், அது எம்மைவிரோதித்தது அதன்றிமைப்பய
னேயாம். இப்படியே நான்குஞானம் சேருமென்று மெம
துபட்சத்தையே மீண்டுமது தழுவிக்கூறிற்று. நான்குஞா
னம் அந்தப்பாடலிற் சேராவெனக்கூறி, அவைசேருமென்
று மெம்மை மறுப்பதொழிந்து கண்மயக்கேறிக் காணம்
போட்டுக்கவிழ்ந்துவீழ்ந்ததிஃதென்கொலோ?

இவ்வற்பஜந்துவைப்பார்த்து ஐயோ பாவம் என யா
ம் அதிகமாகப்பரிதாபப்படுகின்றோம். ஓர்ஜந்துவாக வுருவ
கப்பட்டவிவர் "ஞானமென்பது தொகையால் ஒன்றும் வகையா
ல் இரண்டும் விரிபால் நான்குமாம். ஞானம் ஒன்றே; அது அபர
ஞானம் பரஞானமென்றிருவகைப்படும்; அபரஞானம் கேள்வி விம
ரிசம் என்றும், பரஞானம்பாவனைசமாதியென்றும் விரியும்" என்று
தமது சித்தாந்தத்தைப் புலப்படுத்தினர். தொகைவகை
விரிகளான் முறையே யொன்றுமிரண்டும் நான்குமாக ஞா
னம் வெளிப்படுமாயின், நமதுமுதலியார் ஞானமிரண்டே
யென்றுகூறியது எற்றுக்கு? ஞானம் நாலுஎன்பாரை மறு
ப்பதும் யாதுக்கு? கேள்விமுதலியவைகளை ஞானமென்ற
து உபசாரமென்று பிதற்றியதும்என்னை? விரியினால் நான்
காக ஞானமானது நிலைபெறுதலால், நாலுவிதஞானங் கி
டையாது என அகங்கரித்தெழுதல் நாசமடைந்தது. அன்
றியும், விரிவாகியஞானத்தை யுபசாரமென்றிட்டல்போல
வகையாகியஞானத்தையு முபசாரமென்றொதுக்கித் தொ
கையாகிய ஞானமொன்றினையே ஞானமெனக்கொள்ளி
னஃதொருவாறுபொருந்தும். வகையைமாத்திரங்கைக்கொ

ண்டு விரிவையும், இவைகளுக்குமூலமாகிய தொகையையு
மழுகவிடுதல் என்னநியாயமோ? தொகைஞானமொன்று,
வகைஞானமிரண்டு, விரிஞானம்நான்கு என்று தாமேகூ
றினவர் தமதஞ்ஞானத்திரட்டினோர்மூலையில் ஞானம் ஏழு
என்று இசைத்தபுதுமையாது? தமதுமுடிவு ஏழிலாகுமா
னால், விரியால்ஏழெனலன்றோ ஞானத்தைமுடிக்கவேண்
டும்? அங்ஙனமின்றி நாலாகவே முடித்தலால், நாலுக்
குமேல் வேறுஞானமில்லையென்றுநாட்டும் எங்களுயகர்
ஞானமே வலம்பெற்றுயர்ந்தது. இத்தொகைவகைவிரி
விசாரத்தில் நமது ஈழநாவலருங் கொஞ்சந் தமதுகைவ
க்காட்டியிருக்கின்றனர். எங்ஙனமெனின், தமதஞ்ஞான
சூடாமணி (அ) வதுபக்கத்தில் "ஞானத்தின்சொரூபமும், அ
து இருமுதலாமாறும், கேட்டன்முதலியநான்கும் அவ்விரண்டன்
வகையாமாறும் முன்னர்த்தெரிவிப்பாம்" எனவெழுதி (கசு)
வதுபக்கத்தில் "சிவஞானந்தொகையானொன்றும், வகையானி
ரண்டாயும், விரியான்மூன்றாயு நான்காயு நிற்குமென்பது தானே
போதரும்" எனமுடித்துச்செருக்கியதுகாண்க. (அ) வதுபக்
கத்தில் கேட்டலாதிகளை வகைஞானமென்றார். (கசு) வது
பக்கத்தில் அக்கேட்டலாதிகளையே விரிஞானமென்றார். இ
வற்றுள் யாதுஸத்தியம்? இப்படி முரணிக்கூறுநாவலரை
நல்லவராக்கவன்றோ முதலியார் மூலையிலிருந்துமுட்டி
யெழுந்தனர்? நாவலருக்கும், முதலியாருக்கும் அஞ்ஞா
னமே ஞானமாயினமையால், அன்னோரோரினமாகி யொ
த்துக்குண்டனரென்க. இவருள், ஈழநாவலருக்கு முன்புயா
ம் நல்லறிவுச்சுடர்கொளுத்தியதில் கேள்வி, விமரிசம், பா
வனை என்னுமிவைமூன்றும் பிறவியைத்தவிர்க்காவெனவு
ம், ஸமாதியொன்றே ஜநநமரணங்களைப்போக்குமெனவுந்
தாயுமானசுவாமிகள்கூறியபாடலையுதகரித்துந் தெளிவித்
தோமாகையால், அதுவே நமதுமுதலியார் (கேள்விவிமரிச
மோரினம், பாவனைஸமாதியோரினம்) என்றவிடத்திலும்பயன்
பட்டு அவரைத்தலைகுனிவிக்குமென்க. இரண்டிரண்டை
யோரினமாக்குவது பிழையும், முதன்மூன்றையோரினமு

ம், முடிந்தநிட்டையை யோர்தனியுமாக்குவதே பிழையன்
மையுமாகவறிந்தடங்குக. மூன்மூன்று அபரமும், பின்னொ
ன்றுபரமுமாகும். இவையிங்ஙனமாக,நமதுமுதலியார் சே
க்கிழார்பாடலி லிரண்டுஞானஞ்சேராதகூற்றும், நான்கு
ஞானஞ்சேர்ந்தகொள்கையும் பொருந்துமென ஸமாதான
ங்கூறியவகையாதோவறியேம். அம்முதலியாரதுவைபவ
மிவ்வாறுநிலைதளர்ந்தழிதலால், அவர்கொண்டிருக்கு மிறு
மாப்பைமுற்றுமிறக்கி அவருக்குமுழுக்ஷேமந்தேடுவாம்.

நமது சு-வைத் தெருவிலிழுத்த த-முதலியார் "இப்
பெரியபுராணச்செய்யுளினுள்ளது இரண்டுஞானமோ நான்குஞா
னமோ என்னும்வழக்குக்கு மறுமாற்றங்கூறுவாம்" என்றுதொ
டங்கி அந்தப்பாடலை யிஷ்டம்போலன்வயித்துக்கொண்டு
அதில், அபரஞானம் பரஞானம் என்பவைகளே பெறப்ப
ட்டனவெனவும், அவற்றுள், கலைஞானமே அபரஞான
மும், மெய்ஞ்ஞானமே பரஞானமுமாகுமெனவும், கேட்
டல் சிந்தித்தலென்னுஞ் சாதனங்களைக் கலைஞானமாகிய
வபரஞான முள்ளடக்கிக்கொண்டிருக்கிறதெனவும், அவ்
வபரஞானங்கிடையாதபோது சிவபாதத்தைச்சிந்திக்குஞ்
சம்பத்துவிருத்தித்தற்குக் காரணமாகிய மெய்யுணர்வுகிட்
டாதெனவும், தெளிதல்நிட்டையென்னுஞ் சாதனங்களை
மெய்ஞ்ஞானமாகிய பரஞானமுள்ளடக்கிக்கொண்டிருக்கி
றதெனவும், அப்பரஞானங்கிடையாதபோது கலைஞானம்
வாயிலாகப் பிறப்பை வேரறக்களைந் தெறிதற்குக் காரண
மாகிய பேருணர்வுகிட்டாதெனவுங்கூறிச் சிலபொய்களை
யும்பெருக்கித் தமதுஆபாஸத்தைக்கொட்டி யளந்தார்.
இதனதுயோக்யதை யித்தகையினதென்று யாவருமறிந்து
காற்கடைகொண்டொதுக்கச்செய்வாம். இச் "சிவனடியே"
என்னும்பாடலை நமது த-பண்டிதரன்வயித்துப் பொருள்
கூறியதனுல்விளைந்ததீமையை யிந்நூலில் (உ௭) வதுபக்க
த்தில் விரிவுபடக்கூறினும். இனி அவர்கூறிய யேனையவவ
லக்ஷணங்களையுமெடுத்துக்காட்டிக்களைந்திடுவாம். அச்செ
ய்யுளில் இரண்டேஞானம் பெறப்பட்டதென்றூர. ஏகாரத்

தேற்றங்கொண்டெழுந்தவவை யின்னுமொருஞானத்தை
த்துணைகொள்ளவாவது, இருக்குநிலையினின்று குறையவா
வது கூடாவன்றோ? இங்ஙனமாக, கேட்டல் சிந்தித்தல்க
ளையபரத்தினும், தெளிதனிட்டைகளைப்பரத்தினு முள்ள
டக்கமாக விவர்கூறியவாறென்னை? இவ்விவகாரத்தில் செ
ந்திநாதையர் நாலுஞானம் யாண்டுங்கண்டதுமில்லை கேட்
டதுமில்லையென்றார். ஈழநாவலர் அச்செய்யுளிலுட்படு
பொருளாக நாலுஞானமுண்டென்றார். நமது முதலியார்
நாலுஞானமென்றாற் றமதுமதம்நாறிப்போமென்று அ
வைகளை நாலுசாதனங்களென்றார். சாதனங்களென்றவிட
த்துஞ் சாதனஞானங்களென்றே யவைபெயர்பெறும். இந்
தநாலும் பரமபரமென்னு மிரண்டினுக்கு ஸாதனமாவது
போல அபரம் பரத்துக்குஸாதனமாகத் தட்டில்லையாகை
யால், நாலுஸாதனங்கள்போல அபரமும்ஸாதனமாகக்கழி
ந்து ஞானம்ஒன்றேயென நிலைபெறும். அதனால், நமது
முதலியார் ஞானம்இரண்டேயெனச்சாதித்தது இளிச்ச
வாயன்ஞானமாகமுடிந்தது. பரஞானத்துக்கு ஸாதனமா
கிய அபரமோர்ஞானமாகிநிலைக்கும்போது, அவ்விரண்டி
னுக்குஞ் சாதனங்களெனக்கொண்ட கேட்டலாதிநான்கு
ம் ஏன்ஞானங்களாகமாட்டா? இந்தநியாயத்தால் ஞான
ம் இரண்டேயென்பதழிந்து ஞானம்நான்கேயென்று சா
திக்கப்பட்டது. ஞானம் ஒன்றேயெனவும், ஞானம் நான்
கேயெனவுஞ் சாதித்துக்காட்டினோமாகையால், ஞானம்
இரண்டேயென்றுசாதித்த நமதுமுதலியாரதுஞானம் மு
தலறுந்தொழிந்தது. இனிக்கலைஞானமே அபரஞானமும்,
மெய்ஞ்ஞானமே பரஞானமுமாகுமென்றார். இஃது யாரு
மறியாத அரியவிஷயம்போலும். இவ்வளவருமையானவி
ஷயத்தை அவரன்றி யாரறிந்துசொல்லப்போகிறார்கள்? இ
வ்வரியவிஷயத்தை யிவர்சொல்பவராதல்கொண்டேபோ
லும் (ஞானம்என்பது அறிவு) என்றுகூறிய எங்களைத்தூஷித்த
து? இவர் "அபரஞானங்கிடையாதபோது சிவபாதத்தைச்சிந்தி
க்கும்லவப்பற்று விருத்தித்தற்குக்காரணமாகிய மெய்யுணர்வுகிட்

டா" தெனவுமோர்புதுமைகூறினான்றோ? இவரதுபோதத்தால் ஞானஸம்பந்தருக்கு அபரஞானங்கிடையாதிருக்குமாயினவருக்குச் சிவபாதத்தைச் சிந்திக்கும் ஸம்பத்தும், அதுவிருத்தித்தற்குக் காரணமாகியமெய்புணர்வுங்கிட்டாவென்றே நிச்சயமாயிற்று. அன்றியுமிதில் மெய்யுணர்வானது சிவபாதத்தைச்சிந்திக்கும்ஸம்பத்தை விருத்திசெய்வதொன்றெனவிரித்தார். மெய்யுணர்வென்னுங்கால் மெய்ஞ்ஞானம் என்றுபெறப்படும். மெய்ஞ்ஞானம் ஸித்தித்தபோது சிந்தித்தன்ஞானஞ் சீவிக்கமாட்டாது. சுட்டற்றவநுபவாதீதமாகிய திரிபுடிநீக்கமே மெய்ஞ்ஞானமாகையால், அந்தமெய்யுணர்வு சிந்திக்கும்ஸம்பத்தை விருத்திசெய்யுமென்றது சிரிப்புண்டஞானமாயிற்று. இன்னுமிவர் "பரஞானங்கிடையாதபோது கலைஞானம்வாயிலாகப் பிறப்பைவேரறக்களைந்தெறிதற்குக் காரணமாகியபேருணர்வுகிட்டா" தெனவுமோரதிசயங்கூறினான்றோ? இவரதுபோதத்தால் ஞானஸம்பந்தருக்குப் பரஞானங்கிடையாதிருக்குமாயினவருக்குக் கலைஞானம்வாயிலாகப் பிறப்பைவேரறக்களைந்தெறியும் ஸம்பத்தும், அதற்குக்காரணமாகிய பேருணர்வுங்கிட்டாவென்றே நிச்சயமாயிற்று. அன்றியுமிதிற் பேருணர்வானது கலைஞானம்வாயிலாகப் பிறப்பைவேரறக்களைவதொன்றெனவும்விரித்தார். பேருணர்வு, சிற்றுணர்வுக்குணர்த்துவதொன்று. அதாவது சிவனது அறிவு. சிற்றுணர்வு, உணர்த்தவுணர்வதொன்று. அதாவது சீவனது அறிவு. முன்னையது அறிவிக்குமறிவு. பின்னையது அறியுமறிவு. இவ்விளக்கத்தாற் பேருணர்வினையதென்று வியக்தமாயிற்று. இந்தப்பேருணர்வு சிற்றுணர்வினிடம் பொருந்துதல் யாங்ஙனம்? பொருந்தாததொன்றைப் பொருந்துமென்று சிற்றுணர்வாகிய வான்மாவினிடமேற்றியது அஸங்கதமேயாம். ஈண்டுப்பேருணர்வென்பது வேறுபொருள்பயக்குமேனின், அதனை முன்னரேவிளக்கியிருத்தல்வேண்டும். அபரஞானவிகாரத்திற்கட்டிய மெய்யுணர்வுக்கும், பரஞானவிகாரத்திற்கட்டிய பேருணர்வுக்கும் பேதத்தையுங்காட்டியிருத்தல்வேண்டும். சொற்களை யொன்றோடொ

ன்று ஸம்பந்தமின்றிப்புணர்த்தி வெளிப்படுத்துதலே தம
க்குப் பெருமையாகவெண்ணுதல் தம்மைத்தலைசாய்விக்கு
மென்க. இனியவர்கொண்டகோளிலமைந்தபேருணர்வு பி
றப்பை வேரறக்களைந்திடுமென்றார். அங்ஙனங்களையுங்கா
ல், அதுகலைஞானம்வாயிலாக முடியுமென்றார். இவ்வளவு
ம் பரஞானங்கிடைத்தபின்னரே யமையுமென்றார். இதனா
ல், பரஞானங்கிடைத்தபின்னரே கலைஞானப்பிரஸங்கமும்,
பேருணர்வின்ஸித்தியும், பிறவிநாசமுங் கேட்கப்படுகின்ற
ன. இவையொன்றற்கொன் றதீதமும், யாவும் பரஞானத்
திற்கதீதமுமாதலும் வெளியாயின. இப்படியன்றோ சைவ
பரிபாலனம்பண்ணுதல்வேண்டும்? பரஞானம் கீழ்ப்படி
யாயொழிந்து நிலைகலங்குதல் எந்தச்சைவநூலால் ஸமர்த்
திக்கத்தக்கதோவறியேம். பரஞானத்தின்மேலிட்டதொரு
ஞானமுமில்லாதிருக்கவும், நம்மவரதனைத் தாழ்வுபடுத்தி
க்கண்ணைமூடிக்கொண்டு விவகரித்தது கண்மூடிஞானமே
யாம். அங்ஙனம் விவகரித்தவர் பரஞானம் இத்தகையதெ
னவாவது வெளிப்படுத்தினரா? அதுவுமில்லை. இவ்வாறு
நமது முதலியார் விபரீதத்தாற்பிதற்றியதைப் பேய்ப்புல
ம்பலென்றே கொண்டொதுங்குவர்மேலோர். இங்ஙவிசார
த்தால் "சிவனடியே" என்னும்பாடலிலுள்ளது "இரண்டு
ஞானமோ நான்குஞானமோ என்னும்வழக்குக்கு மறுமாற்றங்கூறு
வாய்" எனவெளிவந்த அம்முதலியாரதுசெருக்குத் தலைக
விழ்ந்துபோயிற்று.

இனி நமது த-முதலியார் "இச்செய்யுளிலுள்ளது இர
ண்டுஞானமே. இவ்விரண்டேஞானமெனப்படும். இதற்குப்பிரமா
ணம் "உயர்ஞானமிரண்டாமாறுமலமகலவகலாதமன்னுபோதத்-
திருவருளொன்றென்றதனைத்தெளியவோதுஞ் சிவாகமம" ஆம்.
இது சிவப்பிரகாசமென்னுஞ் சுருதியிற்கண்டது. இதனினும் பலி
ஷ்டப்பிரமாணமொன்றுவேண்டுமோ?" எனத்தமதுமலவாய்த்தி
றந்துரையாடி மகிழ்ந்தார். இவர் "இரண்டுஞானமே. இவ்விர
ண்டேஞானம்" என்றுகூறியஸம்பிரமத்தை முன்னேயாம்
வெளுக்கச்செய்தோமாகையாலும், "உயர்ஞானமிரண்டாம்"
என்னுஞ்சிவப்பிரகாசச்செய்யுளைச் செந்திநாதையர்-சபா
பதிப்பிள்ளையென்பவர்களெடுத்தாண்டபோது எடுத்துக்

கொண்ட பிரமேயத்தை யநுசாதிக்கமாட்டாதென நியாயங்காட்டி ஸமர்த்தித்தோமாகையாலும், அன்றேனுமறுத்த (ஞானபேதத்தெளிவு - ஞானபேதத்துணிவு)களைப் பார்த்தும், பாராதவர்போல வவற்றிலுள்ளநியாயங்களை வருவித்து நமது முதலியாரோர்ஸமாதானமுந் தேடாமையாலும் அம்முதலியார்தேடிய சிவப்பிரகாசச்சுருதி "சிவனடியே" என்னும்பாடலுக்குப் பிரமாணமாகாதடங்கியது. அச்சிவனடியே யென்னும்பாடலில் யாற்றுநீர்ப்பொருள்கோளால் நான்குஞானம் பெறப்படுதலால், அதற்குப்பிரமாணம் "கேட்டலுடன்சிந்தித்தறெளிதனிட்டை கிளத்தலெனவீரிரண்டாங்கிளக்கின்ஞானம்" என்னுஞ் சிவஞானசித்தியேயாம். இதனினும் பலிஷ்டப்பிரமாணமொன்று வேண்டுமோ? சிவப்பிரகாசம் பலிஷ்டப்பிரமாணமேயாயினுஞ் சித்தியாரில் வியாப்பியமாதலானும், அதற்குச் சித்தியார் வியாபகமாகலானும், அச்சிவப்பிரகாசத்து மிரண்டேஞானம் எனக்கூறாது இரண்டுஞானத்தோடு சித்தியாரிற்கூறிய நான்குஞானத்தையுங் கூறினமையானும் நமது முதலியார்செய்யவந்த ஜாலவித்தை சிரிப்புண்டழிந்தது.

இம்மட்டோ, (க) முதலியாரைத் தடுத்தாட்கொண்ட (த) முதலியார் சிவஞானயோகிகள் - கச்சியப்பமுனிவர்முதலிய சிவாநுபூதிமான்களுடையபெருமையைத் தமக்குத் தெரிந்தவரையிலெடுத்தெழுதி, அவர்களைநோக்க இவரெவ்வளவு என்று எமதுநாயகரவர்களைத் தூஷித்தார். எமதுநாயகராவது, யாமாவது, எங்களைச்சேர்ந்தவர்களாவது அப்பெரியோர்களைத் தூஷித்தாலன்றோ வதற்குப்பரிகாரந்தேடி யவர்களைப்பூஷித்துக்காட்டவேண்டும்? யாமும், எமதுநாயகரும் அம்முனிவர்களைத் தாழ்வுகூறினதில்லையோவெனின், பூர்வபட்சிகள் தாங்கள் விபரீதத்தாற் புலம்புவதற்காதாரமாக அம்முனிவர்களைச்சான்றுகூறுங்கால், அவர்வாக்குகளை யவ்வாறுகொண்டால் தாழ்வுண்டாமென்றதேயன்றி வேறில்லை. எமது நாயகரவர்கள் வெளிப்படுத்திருக்குஞ் சிவாதித்யாத்நாவலி - கூரேசவிஜயபங்கமுதலிய பலநூல்களிலும் (திராவிடமஹாபாஷ்யமுனிவர்) எனச் சிவஞானஸ்வாமிகளைப் பிரஸ்தாபித்துப் பலவி

ட்டுங்களிற்புகழ்ந்து துதித்திருப்பதை நமது த - முதலியா ரறியார்போலும். சிவனடியார்களாகிய அவர்கள்பேரில் எங்களுக்கிருக்குமன்பை அன்பின்சொரூப மின்னதென் றறியாத அத் (த) முதலியாரெங்ஙனமறிவார்? அச்சிவ ஞானயோகிமுதலியவர்களும், ஞானஸம்பந்தரும் ஸமம் என்று பூர்வபட்சிகள்பிதற்றினால் ஞானஸம்பந்தப் பெரு ந்தகைக்குமுன்னர் அம்முனிவர்க ளெங்ஙனம்ஸமமாவர் என யாம்கடாவினேம். இது அம்முனிவர்களைத் தூஷி த்ததாகாது. ஞானஸம்பந்தர் (பதியானஞானமுனிவன்) என் று படிக்கப்பட்டவராகையால், அவருக்கு அவரேஸமமெ ன்க. பூர்வபட்சியார் எம்மைத்தூஷித்தது இவ்வாறுபரிகார த்தைப்பெற்றமையா லம்முனிவர்களைப் பரிந்துகூறவந்த அத் (த) முதலியாரதுகுறைவை இனிக்கொஞ்சமெடுத்துக் காட்டுவாம். இவர் "ஸ்ரீஉமாபதிசிவாசாரியர் பரம்பரையில் ஒரு வரும், திருவாவடுதுறை யாதீனப்பிரதமாசாரியருமாகிய ஸ்ரீநமச் சிவாயதேசிகர்) என்று எழுதினர். ஸந்தானகுரவர் நால்வ ருள், உமாபதிசிவாசாரியர் ஒருவர். ஒருவரானவிடத்தும் அவர் நாலாவதாயுள்ளவர். அவருக்குமுன் மூவர்படிக்கப் பட்டுள்ளார். முதன்மூவரைவிடுத்து நாலாவதுபுருஷரைப் பிரஸ்தாபித்து அவரதுபரம்பரையென்னுங்கால் அவர் யா ருடைய பரம்பரையென்பது விளங்காமற்போயிற்று. மு தன்மூவருள் மெய்கண்டசிவாசாரியர் பரம்பரை, அருண ந்திசிவாசாரியர்பரம்பரை, மறைஞானசம்பந்தசிவாசாரி யர்பரம்பரையென வேறுபரம்பரைகளிருந்தாலொழிய உமாபதிசிவாசாரியர்பரம்பரையென வொன்றைப்பிரஸ்தா பிப்பது குணஞ்செய்யாது. இவ்வாசாரியர்க ளுல்வரு மொருவர்பின்னொருவராக வந்தவர்கள். இவர்களுக்கு மூ லமாயுள்ளபேர் ஸ்ரீநந்திகணநீசர், சநற்குமாரபகவான், சத் தியஞானதரிசனிகள், பரஞ்சோதிமுனிவர் என்பவர்கள். இவர்களுக்கும்மூலமாயுள்ளவர் ஸ்ரீசிவபெருமான். இவ் வுண்மையுணர்ந்தபேர் ஸ்ரீகைலாஸபரம்பரைத் திருவாவடு துறையாதீனம் என்று பண்டைக்காலந்தொட்டு வழங்கிவ ருகின்றார்கள். இதற்குமாறாக நமதுமுதலியார் யாதுங்

ருதியோ வோர்புதுகற்பனைசெய்துகொண்டனர்? ஸ்ரீகச்சியப்பமுனிவர் முதலினோர் இரண்டுஞானங்கூறியது ஸ்ரீசேக்கிழார்பாட்டலையநுஸரித்தன்றெனவும், அவர்களிரண்டுஞானங்கூறியதுபோல யாமும்ஸங்கர்ப்பித்தவழி இரண்டுஞானங்கூறுவேமெனவும், அன்னோர்வாக்குகள் எடுத்துக்கொண்டபிரமேயத்துக்குப் பிரமாணமாகாவெனவும் எமதுஞானபேதத்தெளிவு, ஞானபேதத்துணிவுகளிற் பலபடியால் யாம் நிரூபணஞ்செய்திருக்கின்றோமாகையால், நமது முதலியாரெடுத்தாண்ட தணிகைப்புராணத்தை யாம்தொடாமல் விப்ராந்தியடைந்தாம். சீகாழிப்புராணம் அதனையாக்கியோரதுயோக்யதையா லலங்கதமுற்றிருக்கின்றமையா லதனையறவேயொழித்தாம்.

நமது ௬-வைப்பிடித்தலைக்குன்கிரகமாகிய ௧-முதலியார் "இவர்செய்திருக்குஞ் சிறியபுத்தகங்களின் கணக்கேயாம்" என வெமதுநாயகரவர்கள் சிறுநூல்கள்செய்த சிறுமையையெடுத்துக்காட்டினர். நமதுமுதலியார் செய்திருக்கும் பெருநூல்களுக்களவில்லையாகையால், அவரதுபெருமைக்கு முன்னர் நாயகர்பெருமையைத் தாரதம்யம்பட விளக்கினர்போலும். நமதுமுதலியார் தாம் கவிராயராகத்தோன்றி மூலைமுடக்குகளின்முட்டிக் காலம்போக்கிவந்ததற்கு அவர்பேர்விளங்க "ஞானபேதவிளக்கமறுப்பு" என்னும் பெரியபிரபந்தம் இப்போது வெளியிட்டாராகையால் இறுமாந்து தம்மைமறந்து கூறினர். எமதுநாயகரவர்கள் வெளியிட்டிருக்குநூல்கள் சிவாதிக்யரத்நாவளி, சைவசூளாமணி, சிவதத்வசிந்தாமணி, சித்தாந்தரத்நாகரமுதலிய பலவுளவென்பதுயாவருமறிவார்கள். இவற்றுளொவ்வொருநூலும் (௨௦) (௩௦) (௫௦) பாரங்களுக்கதிகமாக விரிந்துவிளங்கும். இவைகளைக்கண்டு பொறாமையால் வயிறெரிந்து நமதுமுதலியார் வாயிலடித்துக்கொண்டால் யாரென்னசெய்யலாம்? இது அவர்தலையெழுத்தென்க.

இக்கவிராயர் விதியோடு எழுதக்கற்றவராகையால் ஓரிடத்தில் "சிக்ஷா கற்பசூத்திரமுதலிய வேதாங்கங்கள்" என்

றுளழுதினர். சிக்ஷையென்றால் கீர்வாணமாய்விடுமென்று சிக்கையென்று தமதுசிக்கை வெளிப்படுத்திக்கொண்டனர் போலும். சிக்ஷையென்றெழுத விசையாதவிவர் (தநந்தரம்-ஆநநம்) முதலிய கீர்வாணபதங்களை ஏனோ ஆளவேண்டும்? தாம் வடகலையிலும் வல்லாரென்பதை எல்லார்க்குமறிவித்துத் தமதுகல்லாமையைக் காட்டினார்போலும். இவரது ஜந்மம் சீசீகொடிது! கொடிது!!

இனிச் "சிவனடியே" என்னும்பாடலில் எமது நாயகரவர்கள் "சிவனடியே - திருப்பெருகுசிவம்" என்பதையும், "பவமதனையறமாற்றும்" என்பதையும், "உவமையிலா" என்பதையும், "உணர்வரிய" என்பதையும்விட்டு "சிந்திக்குஞானம்-பாங்கினிலோங்கியஞானம்-கலைஞானம் - மெய்ஞ்ஞானம்" என்பவைகளைமாத்திர மெடுத்தாண்டது தவறுஎன்று தவறுபடக்குரைத்தார். இப்போது நேர்ந்தவாதம் ஞானமிரண்டு-நான்கு என்பவைகளைப்பற்றியேயன்றிப் பிறவிஷயங்களைப்பற்றியன்று. அவைகளைப்பற்றியசர்ச்சையுண்டாயி னப்போது அவற்றைவிரிப்பதும் அவசியந்தான். அஃதில்லாதபோது வீண்கடையைப்பரப்பிக்கொண்டு நமதுமுதலியாரழுது ஓய்ந்ததுபோல் யாமுமழவேண்டுமென்றது என்னபேதைமை? அவர்விரித்தவாய்மையின்வளம் களமுற்றழிந்ததை அழகுபெற மேல்விளக்கினோமாகையால் இனியேனும்வீணதனப்பிரஸங்கத்துக்குவராம லடங்கிவாழ்வாராக.

இந்தப்புத்தியான் வேறொருவிசேடம்பகர்ந்தனர். என்னெனின், "சிவனடியே"என்னும்பாடல் என நாயகரவர்கள்கூறியது தவறுஎனவும், "சிவனடியே" என்னு முதற்குறிப்புப்பெரியபுராணச்செய்யுள் எனக்கூறுவது உசிதமெனவும் விரித்ததேயாம். அங்ஙனம்விரித்ததில், ("சிவனடியேசிந்திக்கும்" என்பது ஒருபாடலோ? அது முதற்குறிப்பென இவருக்குப்புலப்படுவது இன்னமெத்தனைநாட்செல்லுமோவறியேம்) என முழுஅகங்காரவடிவமாய்நின்றார். யாம் கூறியதாலுண்டாகுங்குற்றத்தை இலக்கணமுகத்தானும், உதாரணமுகத்தானு மிவர்விளக்காமல் வீணிறுமாப்புக்கொண்டு குரைத்ததிலென்னபயன்?

(இச்சூத்திரத்தை "பெண்மைசுட்டிய" என்னுஞ்சூத்திரத்தின்பின் வையாதீண்டுவைத்தார்) எனச்சேனவரையர் பிரயோகித்தனர்.

(இக்கருத்து "வினைமுற்றேவினையெச்சமாகலும்" என்னுஞ் சூத்திரத்துட் "கானவரிரிய" என்னுஞ்செய்யுளிற்காண்க) என்று ஸ்ரீசுவாமிநாததேசிகர் பிரயோகித்தனர்.

(அவற்றிற்கெழுத்தென்னுங்குறி "மொழிமுதற்காரண" மென்னுஞ்சூத்திரத்தாலோதுபவாகலி னீண்டெதிரதுபோற்றியாளப்பட்டது) எனவும், (அவை "இயற்சொற்றிரிசொல்" என்னுஞ்சூத்திரத்தாற் பிற்கூறுபவாகலின் ஈண்டெதிரதுபோற்றியாளப்பட்டது) எனவும் ஸ்ரீசங்கரநமச்சிவாயப்புலவர்பிரயோகித்தனர்.

("முதலிற்கூறும்" என்னுஞ்சூத்திரத்துட் சேனவரையருமிவ்வாறேகூறி உரையாசிரியரைமறுத்தனர்) எனவும், (அகரமுதலியபொருட்கு ஈண்டெழுத்தென்னும்பொதுப்பெயர்கூறி "அவற்றுள் "அ இ உ" "ஆ ஈ ஊ ஏ" "ஔகாரவிறுவாய்" "னகரவிறுவாய்" "வல்லெழுத்தென்ப" "மெல்லெழுத்தென்ப" "இடையெழுத்தென்ப" என்னுஞ்சூத்திரங்களாற்சிறப்புப்பெயர்கூறுமாறறிக) எனவும் ஸ்ரீசிவஞானயோகிகள் பிரயோகித்தனர். இன்னும்பலரிவ்வாறேகூறியிருக்கின்றனர்.

இவர்கள் தாங்களெடுத்தாண்டசெய்யுள்களின் முதனிலைமொழிகளை முதற்குறிப்பெனத்தொடுத்து யாண்டுங்கூறுமையால் எமதுநாயகரவர்கண்மேலேற்றியதோஷத்தை அப்பெரியோர்கள்பாலுமேற்றி அவர்களையுங் கல்லாதவரெனக்காட்டித் தமதிலக்கணப்புலமையையும், அதற்காதாரமாகிய இலக்கணநூலையும் நமதுமுதலியார் உலகறியநாட்டுவாராக.

இதுநிற்க, பெரியபுராணத்திலுள்ள செய்யுட்கள் முதற்குறிப்புள்ளதும், முதற்குறிப்பில்லதுமென விருவிதப்பட்டிருக்கின்றனவோ? அங்ஙனமிருப்பினன்றே "முதற்குறிப்புப் பெரியபுராணச்செய்யுள்" எனத் தாம்கூறியவாறு பிறிதினியைபுநீக்கிய விசேடணத்துக்குப் பெருமையுண்டாகும்? பெரியபுராணத்துள் முதற்குறிப்புச்செய்யுளிதுவாயின், முதற்குறிப்பில்லாச்செய்யுளெதுவோ? இதற்கு நமதுமுதலியார் பதில்சொல்ல முடியாதாகலானும், இவர் புலம்புமா

று எவ்வான்றோருங் கூறுமையானும், யாம்கூறியவாறே அன்னோர் பலருங்கூறியிருத்தலானும் எமதுபட்சமே ஸர்வஸம்பிரதிபந்நமாயிற்று. "கந்தமுந்தேனுஞ்சுருக்கமுங்காதற் குறில்குறிலே, சந்தமுந்திரசைதேமாந்தண்குன்றந்தன்சேர்திருவும், கோந்தவிழ்கோதாய்குறடிரைவெள்ளைக்கறத்தெழுவாய், அந்தமுமாவுமிருசீருமோனையுமாமுறுப்பே" என்னுஞ்செய்யுளில் கந்தமென்றற்றொடக்கத்து முதனிலைமொழிகளை நமதுமுதலியார் கூறியவாறு முதற்குறிப்பென நூலாசிரியர் சொல்லாமையாலேயே அவைகளை யொவ்வொருசெய்யுளாக வெந்தமட்டியுங்கொள்ளாதுகையால், நமதுமுதலியார் விபரீதம்பேசியது "சிதம்பரத்தி-லையன்றனக்கறியலாம்" என்றபடியாயிற்று. அந்தோ விவாதறிவின்றன்மை யழகிது! அழகிது!!

இவ்வளவிலமையாது "நாலுஎன்பது தென்மொழியோ வடமொழியோ" எனச் சங்கித்துநின்றனர். இது வழுவற்ற தென்மொழியெனப் பலருங்கழறுவர். இதனையோர்புத்தகத்தின்மூலமாயெம்மைக்கேட்டுத்தெரிந்துகொள்ளவேண்டுமோ? வீதியிற்போகிறபோது பள்ளிக்கூடங்களுக்குப்போகுஞ்சிறுபிள்ளைகளில் யாரையாவதுகேட்டால்அவர்கள்சுலபமாய்த்தெரிவிப்பார்களே! யாம்(நாலு) எனப்பிரயோகித்தது தவறுஎனக்காட்டுவதாயின், அதற்குப்பிரமாணமும்,நியாயமும் எடுத்துக்காட்டி மறுக்கவேண்டும். அங்ஙனமின்றி,வீண்கேள்விகேட்டுத் தலைதடுமாறினாரிதென்கொலோ? அன்றியும், இவர் " அதுசேராது " என்னுந்தொடர்மொழியில் அது என்னுஞ்சுட்டுப்பெயர் அங்ஙனங்கூறியதெனத் தொழின்மேலாகிநிற்கவும், அவ்வுண்மையை யுணராது, அதனைப் பொருண்மேலேற்றி "அதுஎன்பது ஒருமை. அச்சுட்டுச்சுட்டியஞானபேதங்கள்என்னும்பெயர்பன்மை" என விவாதஞ்ஞானத்தை வெளிப்படுத்தினாரிதென்கொலோ? இவரதறியாமைகொடிது பாவம்! பாவம்!! இவ்வாபாஸமுதலியார் சிலகுறட்பாக்களையுதகரித்து எமதுநாயகரவர்களைத் தூஷித்தார். அவற்றிற் கிலக்காயுள்ளவர்கள் அவரும் அவரது குஞ்சுமேயென்பதை யாவருமறிவார்கள்.

அவ்விஷயத்தில் யாம் அதிகசிரமமெடுத்து ஸமாதானஞ் சொல்வது அவசியமன்றென வுபரதியடைந்தாம்.

இங்ஙனநிற்க, எமதுநாயகரவர்கள் "சிவனடியே" என்னும்பாடலில் "சிவஞானம்" என்பதற்கு "சிவனடியேசிந்திக்குந்திருப்பெருகு" என்பது இலக்கணமும், "பாங்கினிலோங்கியஞானம்" என்பதற்கு "பவமதனையறமாற்றும்" என்பது இலக்கணமும், "கலைஞானம்" என்பதற்கு "உவமையிலா" என்பது இலக்கணமும், "மெய்ஞ்ஞானம்" என்பதற்கு "உணர்வரிய" என்பது இலக்கணமுமாம் என்றுகூறியதற்கு நமது சு-வை, ஆட்டிப்புடைக்குந் த-முதலியார் "பின்றொடர்மொழிக்கு முன்றொடர்மொழி அடையென இவருக்குப்படிப்பியாது இலக்கணமெனப்படிப்பித்த கயவனெவனோ" என்றுபெருந்துக்கத்தின்மூழ்கினர். இவருக்கு அவற்றையடையெனக்கற்பித்த பெருந்தடியன்றலைகுனிய வதனுண்மையையுணர்த்துவாம். ஆண்டு இலக்கணமென்று எமது நாயகரவர்கள் கூறியது அந்த ஞானங்களின்விசேடணத்தையன்று. அவற்றானுணர்த்தப்பெற்ற வஸாதாரணதர்மத்தை. இதனையறியாதபெரும்பேதையார் இனி "இலக்கியங்கண்டதற்கிலக்கணமியம்பலிற், பகுதிவிகுதிபகுத்திடைநின்றதை, வினைப்பெயரல்பெயர்க்கிடைநிலையெனலே" என்னுஞ்சூத்திரத்தில் இலக்கியமென்னுஞ்சொற்கு ஆன்றோராற்செய்யப்பட்டுள்ள நூல்களெனவும், இலக்கணமென்னுஞ்சொற்கு அவற்றினமைதியெனவுங்கொண்டு, அந்நூல்களின் முதற்பாகங்களைப்பகுதியாகவும், அவற்றின் கடைப்பாகங்களை விகுதியாகவும் பிரித்துக்காட்டி, நடுநின்றவற்றைப் பெயரிடைநிலையெனக்கூறி இவரதுபாண்டித்யத்தைப் பிரகடனஞ்செய்வார்போலும். இவர் இலக்கணமென்பாரைமறுத்து அடையென்றெழுதவேண்டுமெனக்கற்பித்தாரன்றோ? அங்ஙனங்கற்பித்தவர் அவ்வடையின்னதெனவும், அதன்பேதமும், பிரயோஜனமு மின்னவெனவுமறியாராகலின், இவரது அடையைக் கறுப்புநிறமுடைய கேழ்வரகடையோ, வெள்ளைநிறமுடைய கமபடையோவெனக்கேட்டு விலாவிறச்சிரிக்கின்றனர்பெரியோர். அடை என்னுஞ்சொல்லேயன்றி யதன்

பொருளறியாதுகுளறியவிவருக்கு அதனுண்மையை யுணர்த்தலாமென்றால், ஊசியின்காதி லொட்டகம்நுழைந்தாலுநுழையும், இவரதுபுத்தியி லதனுண்மைநுழைவது கஷ்டம்! கஷ்டம்!! ஆயினும், எம்மைச்சரண்புகுந்திடுவாராயின், அவர்மாட்டிரங்கியருளுதல் செய்வோம்.

இவ்விழுதைராயர் ("உயர்ஞானமிரண்டாம்" என்னுஞ் சிவப்பிரகாசச்சுருதியானே ஞானம் இரண்டேயாதலின், பெரியபுராணச்செய்யுளில் நான்குமுறை கூறப்படு ஞானமும் இரண்டென்றே துணியப்பட்ட துணிவைநோக்காது 'பஞ்சபாண்டவரென்றாலறியேனு கட்டிற்கால்போல' என்று பழமொழியொன்று இவர் பிரயோகித்தனர். அது இவர்மாட்டே பொருத்தமுடைத்தெனத் தெள்ளியோர் தெளிவர்) என முழுநீளமெழுதிமகிழ்ந்தார். இவர்போன்றகசட ரெங்குங்கிடைப்பதரிது. ஏனெனின், இவர் "உயர்ஞானமிரண்டாம்" என்று சிவப்பிரகாசச்சுருதி கூறுகிறதென்றார். உடனே "பெரியபுராணச்செய்யுளில் நான்குமுறை கூறப்படுஞானமும்" என்றார். ஒருநூலிலிரண்டுஞானமும், மற்றொருநூலில் நான்குஞானமும் பெறப்படுகின்றனவென இவர்தாமே முன்னே காட்டிவிட்டு, அவ்விருநூல்களாலும் ஞானம்இரண்டே பெறப்பட்டனவெனத் துணிந்துகூறுதல் யாங்ஙனம்? ஞானம்இரண்டென்பதும், ஞானம்நான்கென்பதும் இவருக்குச்சொல்லாலும் பொருளாலும் பேதந்தராமையால், இவருக்கேயன்றோ அந்தப்பழமொழி பொருந்திநிற்கின்றது? அப்பழமொழியில் ஐந்து, நாலு, மூன்று, இரண்டு, ஒன்று என்னுமெண்கள் பெறப்பட்டும் அவையாவும்பயனிலவாகி ஒன்றிலேயே பொருள்பட்டுநிற்கவிவகரித்த பெருமடையனுக்கும், இவருக்குமென்னபேதம்? இவரன்னகயவர்மாட்டே யுபயோகமாகத்தக்க வப்பழமொழி யெம்மனோர்பக்கலிசையாது!இசையாது!!

இனி, நமது த - முதலியார் "பரம்பொருளாகியசிவம் உள்ளேநிறைந்து ஸாக்ஷாத்கரிக்கும் பெரியஞானம்" என்று எமது நாயகரவர்களெழுதியது தவறுஎனவும், அதனைச்சாதிப்பதற்கு "இதுசிவம் சீவனுள்ளேநிறையும்"எனப்பொருள்கொள்ளக்கிடக்கின்றதே. முத்தியில்சிவத்துள்சீவனடங்குமென "சிறைசெய்ய" என்றது முதலியபிரமாணங்கள் கிடக்கின்றனவே

யெனவுங்கூறித் தமது சைவநிலையைவிரித்துக்காட்டினர். எமது நாயகரவர்களெழுதிய வசனத்தில் ஞானத்தின்றன் மைபெறப்பட்டது. "வையஞ்சுடர்விடுநாகப்பள்ளிகொள்வானு ள்ளத்தானும்" எனவும், "மலர்மிசையேகினன்" எனவும், "அறிந்தஞானியகமுறக்காண்பனல்" என்வும் பிரமாணங்கள் போதரும். பிரமேயத்துக்குத்தக்கவாறு பிரமாணங்கள்சே ர்ந்தன. இவற்றையறியாது முத்தியிலக்கணத்தைக்கூறும் பாடல்களை வீணேயுதகரித்து ஞானத்தை மறுத்ததெவன்! ஞானமின்னது, முத்தியின்னது என அறியாதுருளறிய நம்முதலியாரை அதிகமாகக்கசக்கமனமின்றி யிவ்வளவில் விடுத்தாம்.

இச்சித்தாந்தப்புலவ ரிம்மட்டேயமையாமல், "வட மொழிச்சிவஞானபோதம் பத்தாஞ்சூத்திரத்தால் பாசநீக்கமும், அருள்விளக்கமும் ஒருங்குவைத்துப் பாசநீக்கம்பெற்றேன் சிவாநுபூ தியுடையவனுவனென்வோதிப் பதினேராஞ்சூத்திரத்தால் சிவாநு பூதிநிகழ்ச்சிக்கண் ஓதற்பாலனவற்றையுங்கூறியது; தென்மொழி ச்சிவஞானபோதம் பத்தாஞ்சூத்திரத்தால் 'மலமாயைதன்னெடு வல்வினையின்றே' என்னும் பாசவீடும் 'ஏகனுகியிறைபணிநிற்க' என்னும் வீடுபேறும் உடன்கூறிப், பதினேராஞ்சூத்திரத்தால் ஏகனுகி யிறைபணிநிற்றலாகிய வீடுபேற்றை 'அயராவன்பினரன்கழல்செலுமே'எனவிதந்துகூறியது." எனத் தாம்வடமொழிச்சிவஞா னபோதமும்,தென்மொழிச்சிவஞானபோதமுங் கரைகண்டபுதுமையைத் தெற்றெனப்புலப்படுத்தினர். இம்முதலி யார் தென்மொழிச்சிவஞானபோதத்தில் சிலசூத்திரங்களை யுதகரித்துக்காட்டியதுபோல வடமொழிச்சிவஞான போதத்தில் சிலசூத்திரங்களை யுதகரித்துக்காட்டாததென்னை? அச்சூத்திரங்களையன்றி யவற்றின்பொருளோரற்பமுமறியாதவராகையால், அவைகளையெடுத்தாளாமல் வழுவழுவென்றுவிட்டனர்போலும். அவற்றினுண்மை ஸ்ரீசிவாக்ரயோகிகள்செய்திருக்கும் லகுபாஷ்யம் — குருபாஷ்யங்களால்விளங்குவதாக அவற்றையிவரெங்கேகாணப்போகிறார்? ஏடுகளைக்கண்டாலுங் கீர்வாணபதங்களையுச்சரிக்கவேமாட்டாதவிவரெங்கே யவற்றிலடங்கியவிஷயங்களை யறியப்போகிறார்? இவர் வடமொழிச்சிவஞானபோதம் என்னும்பேரைப்பிரஸ்தாபித்தது அந்தநூலின் கௌரவத்திற்கு ஹானிதேடியதாயிற்று. தென்மொழிச்சிவஞானபோத

த்தி லிவர்கொண்டிருக்குந்தேர்ச்சியை இதுகாறு மிவரெம் மாலலக்கழிந்தமாந்மியத்தால் அறியலாமாகையால், இவ ரையொன்றுமறியாத ஏழையென்றெதுக்குவதே மேலோ ரது துணிவென்க.

இவ்வளவேயோ, நமது சு - வின்மறைந்தியங்குந் த-முதலியார் (இவர் "சித்தியார் சித்தியார்"என்றூர். அதில் இவர் கண்டபாட்டு ஒருபாட்டுத்தானே? அதற்கு முற்பாட்டுகளும் பிற் பாட்டுகளு மிவர்கண்டிருப்பாராயின் இவருக்குத் திரிபுஞானந்தோ ன்றுது) என்று எமதுநாயகரவர்களைத் தூஷித்தார். நமது முதலியாருக்குச் (சித்தியார்)என்னும் பேரைக்கேட்டால் பாம்பின்றலையி லிடிவிழுந்ததுபோலன்றேமுடிந்தது? அத னலன்றே அதிகவெடிப்பாக "சித்தியார் சித்தியார்" என்று ரென அலுத்துக்கொண்டார்? அச்சித்தியாரில் "கேட்டலு டன்" என்னும்பாடலின்மாத்திரமே ஞானமும், அதன்பே தமுஞ் சொல்லப்பட்டிருக்கின்றன. அதற்கு முன்னும்பி ன்னும் போந்தபாடல்கள் ஞானவேள்விமுதலியவைகளை ப் பிரதிபாதித்தலால் அவை ஞானம்என்னும்பிரமேயத் தைச் சாதிக்கமாட்டா. அதனுல், அவற்றுட்பெறப்படும் பலவும் ஞானத்துக்குபகாரமாகா. முன்னும்பின்னும் போ ந்தபாடல்கள் ஞானத்தைப்பிரதிபாதிப்பனவல்லவென வு ரையாசிரியர்களுங் கூறியுரப்பினர். "பார்விரித்தநூலெல்லாம் பார்த்தறியச்சித்திபிலே, யோர்விருத்தப்பாதிபோதும்" என்று பெரியோர்கூறினாரகலி னஃதிச்செய்யுளின் பெருமையை நோக்கியேயென்பதிவரறியார்போலும். இச்சித்தியார்ப்பி ரமாணம் ஞானம் நான்குஎன்பாரைமறுத்து ஞானம் இர ண்டேயென்பாரது கழுத்திற்போட்டிறுக்குங் கத்திரியாக முடிந்தது. இன்னும்விரிக்கிற்பெருகும்.

இக்கண்மூடிக்கவிராய ரிவ்வளவேயன்றி "சென்னை ஸ்ரீஏகாம்பரநாதராலயத்தில் ஆளுடையபிள்ளையார் திருநட்சத்திர மஹோத்ஸவத்தில் அச்சிவனடியாரோடு அவருக்குத் திருமுலைப் பாலோடு சிவஞானத்தைப் புகட்டியருளிய ஸ்ரீசந்திரசேகரமூர்த்தி யினருட்சத்தியையும், ஆளுடையாம்பிகளின் திருநட்சத்திரமஹோ த்ஸவகாலத்தில் அச்சிவனடியாரோடு ஸ்ரீசுப்பிரமணியக்கடவுளு டைய ஞானக்கிரியாசத்திகளையுங்கூட்டித் திருக்கல்யாணங்கள் செ ய்வித்துக்களித்தது சிவத்துரோகங்கள்பயக்குஞ் செய்கையென் று" சிலர் பத்திரிகைகள் வெளியிட்டார்களெனவும், "அத ற்கு நான்குவருடகாலஞ்சென்றும் பதிலெழுதவறியாமல்" எமது நாயகரவர்கள் வாளாகாலம்போக்கினரெனவுங் கோஞசங்

கொஞ்சியுரைத்தார். இதற்கு யாம் "நன்மதிகூறல்" என்னும் பத்திரிகையில் பதிலுரைத்திருக்கின்றோம். அதனைக்கவனியாதவர்போல மீண்டுங்கேட்டுத்தொலைத்தார். இவருக்குத் துணையாகச் சிலரது நாமங்களைச்சுட்டி அன்னோரிவ்விஷயத்தை வினவியிருந்தார்களெனவும் ஆதரவுதேடிக்கொண்டார். அவர்கள் எமது நாயகரவர்கள்பா லன்புபூண்டிருந்த வெமது சகோதரர்கள். ஏதோகாலகதியால் சிவபெருமானிடத்துத் தக்ஷனுக்குத்துவேஷமுண்டாகி, அவன் அவனைவைததுபோல அவர்களும் எமதுநாயகரவர்களை விரோதித்து வைதார்கள். அவன்பின்னர் க்ஷேமத்தின்பொருட்டுச் சிவனைவழிபட்டு அபராதநிவர்த்தி தேடிக்கொண்டதுபோல அவர்களுந் தங்களபசாரம்க்ஷமிக்கப்பெற்று இப்போதுஎங்கள்திருக்கூட்டத்தவராகவே கலந்தின்புற்று நாயகரவர்களது நல்லருளைப்பருகிவருகின்றார்கள். அவர்தன்மை சாலப்பெரிது. அவர்களைப்போல நமதுமுதலியாருக்கும் புண்ணியங்கூட்டினாலன்றோ அவருங்குணப்பட்டுவாழ்வார்? அவருய்யும்வழிதேடுவது கஷ்டம்! கஷ்டம்!! நமதுமுதலியார்தேடிய சாட்சிகள் நிஷ்பலமாயினமையால், இனியுமவரது நாமங்களை முதலியாரிழுப்பாராயின், அவர்கள் நம்முதலியாரைத் தெருவிலிழுத்துவிடாமற்போகார்கள். இதனால், நமது த-முதலியார்காட்டிய அபவாதம் பொய்யாயொழிந்தது.

இதுநிற்க, நமதுமுதலியாரது கௌரவம்விளங்க (மாத்ஸரியப்பிரஸங்கதரிசினி) என்னுநூலொன்று அவரை நேரேமறுத்து யாம் வெளியிட்டு இப்போது ஐந்துவருடங்களாயின. இவ்வளவுகாலமாகியும், அதற்குப்பதில்கூறவகையற்றுப் பதுங்கிக்கிடந்தவிவர் இன்று யாரோவீதியிலே போகிறவர்களுக்கு எமது நாயகரவர்கள் பதிலெழுதாமலிருந்தாரென்று அழவந்தது சிரிப்பாயிருக்கின்றது. அன்னோர் நாயகரவர்களிடமன்பினராயிருந்து தவறினாராகையால் அவர்மாட்டிரங்கி அவரது பழையவன்பைநாடி வாளாவிருந்தனரென்க. நமது த-முதலியார் (திருடன் புகுந்த ஆறுமாசம் நாய்குலைத்தது) என்பதற்கினமாக எங்களது ஞானபேதவிளக்கத்துக்கு ஓர்போலிமறுப்பு இன்றெழுதிவிடுத்த ஸந்தோஷத்தின்பெருக்கேயன்றோ அவரையவ்வாறு கேட்கத்தூண்டி முந்தச்செய்தது? அவர் தமக்குப்பின்னே

கிடைக்கப்போகிறவெகுமான மிப்படிப்பட்டதென்றறியா
மல் துள்ளிமகிழ்ந்தார். இனியாவது அடங்கிவாழ்வாராக.

இனி முடிவாகவோர்விஷயத்தைவிசாரித்துப் பரிஷ்
கரிப்பாம். என்னெனின், ஆளுடையபிள்ளையார், ஆளுடை
யநம்பிகள் என ஆசாரியர்களுடைய திருநாமங்களைப் பிர
ஸ்தாபித்து விவகரித்துவந்த நமது ௧-முதலியார் (அச்சிவ
னடியாரோடு) என அவர்களை மீண்டும்பிரஸ்தாபித்தார். சம
யாசாரியர்கள், சமயகுரவர்கள் என்னும் பிரஸித்தியடை
ந்திருக்குமவர்களை அடியவர்களென்றுகூறுவது அன்பில்
லாத சாமானியர்களுக்கேயடுக்கும். நமது கிகிமுதலியார்
தம்மையுஞ்சிவனடியாரெனவேயன்றோ எண்ணியிருக்கின்
றனர்? தாமுஞ்சிவனடியார், அவர்களுஞ்சிவனடியார்களா
னல், தமக்கும் அவர்களுக்கும்பேதமென்னே? தாம்முத
லிற்பிரஸ்தாபித்த ஆளுடையார் என்பதற்கும், பின்னர்ப்
பிரஸ்தாபித்த அடியாரென்பதற்கும் பேதங்காணாராயினர்.
ஆளுடையாரென்பது அநுக்ரஹஞ்செய்கின்றவரும், அடி
யாரென்பது அவ்வநுக்ரஹத்தைப்பெறுகின்றவருமாக மு
டிகின்றமையால், அவற்றின்பேதமறியாது நம்மவர்குளறி
யது அவருக்கியல்பாயிற்று. முன்பின்முரணப்புலம்புவது
முதலியாரது சொந்தநிதியென்பதை யாவரோமறுக்கவல்ல
வர்? சிலர் ஆளுடையாரென்றவிடத்தும் அடியாரென்னும்
பொருளையே கவர்ந்து கதறுகிறார்கள். அவரோடினப்பட்டு
நமதுமுதலியாரும்பிதற்றுவாரெனின், திருநாவுக்கரசுசுவா
மிகள்புராணத்தில், "ஆளுடையநாயகன்றனருள்பெற்றங்ககன்
றுபோய்" எனவும், திருஞானசம்பந்தசுவாமிகள்புராணத்தி
ல் "ஆளுடையதிருத்தோணியமர்ந்தபிரானருள்பெருக" எனவும்,
"ஆளுடையாளுடன்றோணியமர்ந்தபிரானருள்போற்றி" எனவும்
போந்தபாடல்களுக்குப்பதில்சொல்லி அப்புறந்தாண்டுவா
ராக. இவற்றுட் சிவபெருமானை ஆளுடையநாயகர் ஆளுடை
யபிரான்எனவும், உமாதேவியாரை ஆளுடையாள்எனவுங்
கூறுவதால் ஆளுடையாரென்பதற்கு ஆட்கொள்ளப்பட்ட
வனெனப்பொருள்கொள்வது அஸங்கதமாயிற்று. சிவபெரு
மானுலாட்கொள்ளப்பெற்றவர்கள் அறுபத்துமூவருமேயா
க, அவர்களுக்குஆளுடையாரென்னும்விசேடம்யாண்டுங்கே
ட்கப்படாமையானும், ஆசாரியர்நால்வருக்குமாத்திரமே

# ஞானபேதவிளக்க நியாயரக்ஷாமணி.

அவ்விசேடம் யாண்டுங்கேட்கப்படுகின்றமையானும் ஆட்கொள்ளப்பெற்றகாரணத்தால் நால்வர்களையும் ஆளுடையாரென்பதென்னு நியாயம்விபசரித்தது. அன்றியும், அவர் சிவனாலாளப்பட்டமையா லாளுடையாரென்னும்பேர்பெற்றாரென்ப தோர்விசேடமன்று. அவ்வாளுடையாரென்பதை யோர்சிறப்பாகக்கூறினமையால், அது உயர்ந்த பொருளையன்றித் தாழ்ந்தபொருளைப்பயத்தல் அநாதரணியமென்க. இந்நியாயத்தால் உலகமுய்யவாண்டருளுந்தன்மைபோதரவே ஆளுடையாரென வவர்சிறந்தாரென்பதே யமைவுடைத்து. எம்பெருமக்களுள்வரும் அடியவராகார்! ஆகார்!! ஆளுடையாரெனச்சிறந்தமையால், அவர்கள் பரமபதியினது அருண்மூர்த்தங்களென்பதே துணிவு. இவ்வுண்மைதோன்றாமல் நமது த-முதலியார் ஆசாரியமூர்த்திகளை அடியவர்களெனப் பரிந்தழுதது அவராது பாவமாகமுடிந்தது. அடியார்கள்என்னும்பெயர் ஜீவஸாமானியர்களுக்குஞ் சிறக்குமாகையால், அது அவ்வருளாளர்கள்பாற் சென்றுகூடாது. ஸ்ரீஜ்ஞாநஸம்பந்தப்பெருமானை யோர்ஜீவனென்றுபுலம்பிவிட்டு யாழ்ப்பாணிகளிருவர்பட்டபாட்டை நமதுமுதலியா ரறிந்தவிஷயமேயாகையாலும், அத் (த) முதலியா ரங்ஙனமோரிடத்தும் பிரஸ்தாபியாமையாலும், (சிவனடியார்) என்று அவரெம்பெருமக்களைக்கூறியது சுத்ததெரியாமையாகையாலும் அவ்விஷயத்திலவரை யதிகமாகவலட்ட வெமக்குமனமில்லை. இனியிவ்வுண்மைகளை யேகாந்தஸ்தானத்திலிருந்து விசாரித்துத்தெளிந்து ஸ்ரீஜ்ஞாநஸம்பந்தவள்ளல் முதலினோரைப் பதியினது அருண்மூர்த்தங்களெனவறிந்து அவரும், அவருடைய குஞ்சுகளுங் குணப்படுவதோடு இனிவீண்விவகாரங்களுக்குப் போகாமல் சுகித்திருக்குமாறு பிரார்த்தித்துத் திருவருளைச்சிந்திக்கின்றோம். சுபம்! சுபம்!! சுபம்!!!

## வாழ்த்து.

வாழ்க ஞானசம் பந்தன் மலர்க்கழல்<br>
வாழ்க நால்வித ஞானங்கள் வண்பொழில்<br>
வாழ்க மாதுமை மாதவன் [illegible] சவர்<br>
வாழ்க நீற்றெழில் சைவமுய் வாழ்கவே.

மெய்கண்டான்திருவடிவாழ்க.

திருச்சிற்றம்பலம்.